செங்கல்பட்டு மாவட்டத்தில் கல்கி — II

KALKI 27.9.87 ரூ. 2.

# கல்கி





* புஷ்பா — ஏழுமலை தம்பதிக்குக் கு. க. வுக்குப் பிறகு பிறந்த குழந்தை பீட்டர்.



* ரம்ஜா — சொக்கலிங்கம் தம்பதிக்குக் கு. க. வுக்குப் பிறகு பிறந்த குழந்தை சசிகலா.



* குமாரி; கு. க. வுக்குப் பிறகும் குழந்தை.

# கு.க. திட்டத்தில் குளறுபடிகள் !

கடந்த மூன்று ஆண்டுகளாகக் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை மிகச் சிறந்த முறையில் அமல்படுத்தி வருவதற்காக,' மத்திய அரசின் பரிசான இரண்டரைக் கோடி ரூபாயைப் பெற்றிருக்கிறது தமிழக அரசு. ஆனால் செங்கல்பட்டு மாவட்டத்தில் நாங்கள் சுற்றுப்பயணம் செய்த போது, இந்தப் பரிசைத் தமிழக அரசு பெற்றிருப்பது நியாயம்தானா என்கிற சந்தேகம்தான் ஏற்பட்டிருக்கிறது. காரணம், அந்த அளவுக்கு இந்தக் கு. க. திட்டத்தில் குளறுபடிகள்! உதாரணத்திற்குச் சில இடங்களைப் பார்ப்போம்......

ஸ்ரீபெரும்புதூருக்கு அருகில் இருக்கிறது காந்தூர் மேட்டுக் காலனி. இது முழுக்க முழுக்க ஹரிஜன மக்கள் வாழும் கிராமம். அங்குள்ள எத்திராஜன் என்பவரைச் சந்தித்த போது, ''சார், இங்குள்ள பெண்களில் பலர் 'லேப்பராஸ்கோப்' முறையில் கு. க. செய்து கொண்டவர்கள்தான். அப்படிச் செய்து கொண்ட பெண்களுக்கும் குழந்தைகள் பிறந்திருக்கின்றன. அவர்களையே உங்களுக்குக் காட்டுகிறேன் வாருங்கள்...'' என்று அழைத்துச் சென்றார்.

திருமதி குமாரி என்ற பெண்மணியைச் சந்தித்தோம். ''கு. க. செய்துக்கிட்டா குழந்தை பிறக்காதுங்கிற நம்பிக்கையில தான் நாங்கள் இருந்தோம். ஆனால் கு. க. செய்துக்கிட்ட பிறகுதான் எனக்கு இந்தக் குழந்தை பிறந்தாள். என்னங்க செய்யறது? கு. க. செய்த அந்த டாக்டர்களையே மறுபடியும் கேட்டபோது, சரியான பதிலே சொல்லலீங்க...'' என்றார்.

அங்கேயே முருகம்மாள் என்ற பெண்மணிக்கும் இப்படிக் கு. க. செய்து கொண்ட பிறகும் குழந்தை பிறந்திருக்கிறது. அதுபோலவே கலந்தூர் மேட்டுக் காலனிக்கு அருகிலுள்ள சோகண்டி கிராமத்திலுள்ள ரம்ஜா, புஷ்பா ஆகியோருக்கும் கு. க. செய்து கொண்ட பிறகு குழந்தைகள் பிறந்



* பேதன்



* வேதகிரி

திருக்கின்றன. இதே நிலைதான் சுற்று வட்டா ரத்திலுள்ள மொளச்சூர், பன்னூர் ஆகிய கிராமங்களிலும் இருப்பதாகச் சொன்னார் கள்!

அடுத்து, மதுராந்தகம் அருகிலுள்ள ஜமீன் எண்டத்தூர் ஹரிஜனக் காலனிக்குச் சென்றோம். லட்சுமிகாந்தன் என்பவரைச் சந்தித்தபோது, "எங்கள் காலனியில் ஏற் கெனவே கு. க. செய்து கொண்ட ஆண் களுக்கு, மறுபடியும் கு. க. செய்தார்கள் சார்..." என்றார் அவர்.

"மறுமுறை எப்படிச் செய்ய முடியும்?"



* கதிர்வேலு



* லட்சுமிகாந்தன்



* நாராயணன்

என்று வியப்போடு நாம் கேட்டோம்.

"நானே அப்படிச் செய்து கொண்ட வன்தான் சார். இரண்டாவது கு. க. செய்த போது வெறுமனே பஞ்சைச் சுற்றி பேண் டேஜ் போட்டதோடு சரி. வேறு எதுவுமே செய்யவில்லை. வேண்டுமானால் அப்படிச் செய்து கொண்ட மற்றவர்களைக் கூப்பிடு கிறேன். நீங்களே விசாரித்துப் பாருங் கள்..." என்று கதிர்வேலு, வேதகிரி, சண் முகம், பேதன், ரத்தினவேலு, மூரி என்று பலரையும் வரவழைத்தார் அவர்.

* சண்முகம்



* எத்திராஜன்



"ஏற்கெனவே கு. க. செய்து கொண்டு விட்ட நீங்கள், மறுமுறையும் செய்து கொள்ள எப்படி ஒத்துக் கொண்டு சென் றீர்கள்?" என்று நாம் அவர்களைக் கேட் டோம்.

"பணம் சார். நாற்பது ரூபாய் தர்றாங்க. ஒண்ணுமே செய்யலே. சும்மா பஞ்சைச் சுத்தி பேண்டேஜ் மட்டும்தான் போட்றாங் கன்னு புரோக்கர் நாராயணன் வந்து சொன் னப்போ, சரி, நமக்கும் இரண்டு மூணு நாளைக்குச்சாராயம்குடிக்கப்பணம்கிடைக்கு மேன்னுதாங்க போனோம். அவங்களாப் பார்த்துக் குடுக்கிற பணத்தை ஏங்க விட ணும்?" என்றார்கள் அவர்கள்.

புரோக்கர் நாராயணனைக் கேட்ட போது, "யாராயிருந்தாலும் பரவாயில்லே. கூட்டிக்கிட்டு வர்ற ஒவ்வொரு ஆளுக்கும்

பத்து ரூபாய் வீதம் கமிஷன் தர்றதாச் சொன்னாங்க. அதனாலதாங்க நூறு பேர் வரைக்கும் கூட்டிக்கிட்டுப் போனேன்...'' என்றார் அவர்!

''எனக்கு ஆபரேஷன் பண்ணிக்கிட்ட பிறகும் இரண்டு குழந்தைங்க பிறந்திருக்குங்க...'' என்றார் பேதன்.

''எனக்கும் அப்படித்தாங்க. ஆபரேஷன் பண்ணிக்கிட்ட பிறகுதான் என்னோட மூணாவது குழந்தை முருகன் பிறந்தான்...'' என்றார் ரத்தினவேலு என்பவர்.

மேலும் முருகன், வெங்கடேசன் ஆகிய இரண்டு இளைஞர்களுக்குத் திருமணத்திற்கு முன்பே கு. க. செய்தார்களாம். இப்போது அவர்களுக்குத் திருமணம் ஆகிக் குழந்தைகளும் இருக்கின்றனவாம்! சொன்னார்கள்.

இவற்றையெல்லாம் வைத்துக் கொண்டு பார்க்கும் போது, தமிழக அரசின் கு. க. திட்டம் என்பது வெறும் புள்ளி விவரங்கள் மட்டும்தானோ என்ற சந்தேகம் எழுகிறது. கு. க. திட்டத்தில் நூற்றுக்கு நூறு சதவீதம் வெற்றியடைய முடியாது; ஒன்றிரண்டு சதவீதம் பொய்த்துப் போகவும் வாய்ப்பிருக்கிறது என்பதை ஒப்புக் கொண்டாலும் ஒரே ஊரில் பலர் முன்வந்து கு. க. வுக்குப் பின் குழந்தை பிறந்ததாகக் கூறுவதிலிருந்து கு. க. ஆபரேஷன் பொய்த்துப் போவது ஒன்றிரண்டு சதவீதம் அல்ல; அதைவிட மிக அதிகம் என்ற முடிவுக்கே வர வேண்டியிருக்கிறது. இது அலட்சியமான அணுகுமுறையை உணர்த்துகிறது என்றால் ஜமீன் எண்டத்தூரிலுள்ள ஹரிஜனங்களுக்கு இரண்டாவது முறையாகக் கு. க. செய்தது எதற்காக? வெறும் புள்ளி விவரங்களுக்காகத்தான் என்பதில் சந்தேகமே இல்லை. அதோடு, இரண்டாவது முறையாகக் கு. க. செய்யப்பட்டவர்களுக்கு வழங்க வேண்டிய முழு ஊக்கத் தொகையும் வழங்கப்படாமல் வெறும் நாற்பது ரூபாய் தான் வழங்கப்பட்டிருக்கிறது என்பதால் மீதித் தொகையை யார் கபளீகரம் செய்தது? இதுபோல இன்னும் எத்தனை கிராமங்களில் நடந்திருக்கிறதோ, யார் கண்டது?

ஆக மொத்தம், கு. க. திட்டத்திற்காக மத்திய அரசு தரும் மான்யத் தொகையை, ஏழை மக்களின் வறுமையையும், அறியாமையையும் பயன்படுத்தித் தமிழக அரசின் அதிகாரிகளும் ஊழியர்களும் ஏப்பம் விட்டுக் கொண்டிருக்கிறார்களோ என்ற சந்தேகம்தான் எழுகிறது. இந்நிலையில் கு. க. திட்டத்தை அமல்படுத்துவதில் மத்திய அரசின் பரிசைப் பெற்றிருக்கிறோம் என்று தமிழக அரசு பெருமைப்பட்டுக் கொள்வதைக் கண்டால் சிரிப்புத்தான் வருகிறது.

— ப்ரியன்

அட்டையில்: கு. க. வுக்கு முன்பு பிறந்த இரண்டு குழந்தைகள் மற்றும் கு. க. வுக்குப் பிறகு பிறந்த மூன்றாவது குழந்தையுடன் ரத்தினவேல் — இந்திராணி தம்பதி.
வண்ணப்படம்: கே. வி. ஆனந்த்







• மாங்காடு கோவிலுக்குச் செல்லும் இந்த வழியில் தான் முன்பு நூலகம் இருந்தது......



• எ. ஜெ. ராமன்



• மணலி ராமகிருஷ்ண முதலியார்

மாங்காடு:

# சில குற்றச்சாட்டுகளும் பதில்களும்...

சென்னைக்கு அருகில் பிரபலமாகி விட்ட கோயில்களில் மாங்காடு காமாட்சி அம்மன் கோயிலும் ஒன்று. அங்கும் பிரச்னைகள். பிரச்னைகளுக்குக் காரண கர்த்தா, கோயில் பரம்பரை தர்மகர்த்தாவான 'மணலி' ராமகிருஷ்ண முதலியார்தான் என்று குற்றம் சாட்டுகிறார்கள் பேரூராட்சி உறுப்பினர்களான எ. ஜெ. ராமனும் எம். பி. துரையும்.

குற்றச்சாட்டு: பக்தர்கள் வசதிக்காகப் பேருந்து நிலையம் கட்ட அரசு ஐந்து லட்சம் ரூபாய் ஒதுக்கியும், பேருந்து நிலையம் கட்டக் கோயில் நிலத்தைக் கொடுப்பதற்கு ராமகிருஷ்ண முதலியார் தடையாக இருக்கிறார்...

மணலி ராமகிருஷ்ண முதலியாரின் பதில்: கோயில் நிலத்தைத்தான் கொடுக்கப் போகிறோம். கலெக்டரும் மற்ற அதிகாரிகளும் வந்து பார்த்துவிட்டுப் போயிருக்கிறார்கள். இதில் என்னுடைய தலையீடு எதுவுமே இல்லை.

குற்றச்சாட்டு: உயர்நிலைப் பள்ளி இருந்தும், படிப்பதற்குப் போதிய கட்டட வசதியும், விளையாட்டுத் திடலும் இல்லை. முதலியார் மனது வைத்தால் இடம் கிடைக்கும்.

பதில்: பள்ளிக்கு இடத்தைக் கொடுத்ததே நான்தான். விளையாட்டுத் திடலுக்காகக் கொடுக்கப்பட்ட இடத்தில், குடிசைகள் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். நிலைமை இப்படியிருக்க நான் நிலம் கொடுக்கும் பிரச்னை எழவே இல்லையே!

குற்றச்சாட்டு: 1955 இல் கட்டப்பட்ட நூல் நிலையத்தைக் கோயில் வசதிக்காக இடித்து விட்டார்கள். நல்ல கட்டடம் கட்டித் தருவதாக ராமகிருஷ்ண முதலியார் உறுதி கொடுத்துப் பதினொரு வருடங்களாகியும் ஒன்றும் நடக்கவில்லை.

பதில்: கோயிலுக்கு ஒரு புது வழி உண்டாக்குவதற்காக நூல் நிலையத்தை இடித்ததும் கட்டித் தருவதாக ஒப்புக் கொண்டதும் உண்மைதான். காஞ்சி பரமாச்சாரியாரும், ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளும் மாங்காட்டில் தங்கியிருந்த போது, 'இந்த நூல் நிலையக் கட்டடத்தை எடுத்து விடுங்கள்; கோயில் பிரபலமாகும்' என்றார்கள். அவர்கள் சொன்னபடி செய்தோம். கோயில் பிரபலமாயிற்று. நிச்சயம் நூல் நிலையம் கட்டித் தருவோம்.

குற்றச்சாட்டு: மாங்காட்டில் தடுக்கி விழுகிற இடமெல்லாம் மணலி ராமகிருஷ்ண முதலியார் நிலம் மற்றும் கோயில் நிலம்தான். அப்படியிருந்தும் காவல் நிலையம் கட்ட, சுகாதார நிலையம் கட்ட மின் நிலையம் கட்ட நிலம் கொடுக்காமல் முட்டுக்கட்டை போடுகிறார்!

பதில்: காமராஜர் சொன்ன ஒரு வார்த்தையை மதித்து மணலி பகுதியில் எழுநூறு ஏக்கர் நிலத்தைத் தொழிற்சாலைகளுக்குக் கொடுத்த குடும்பம் எங்கள் குடும்பம். நீங்கள் சொல்லும் காரியங்களுக்காக நிலம் கேட்டு யாரும் என்னை அணுகவில்லை. ஊருக்கு நன்மை வருவதை நான் என்றும் தடுக்க மாட்டேன். ஊர் வளர்ச்சிக்காகக் கோயில் பணத்தில் இருந்து ஒரு லட்ச ரூபாய் கொடுத்துள்ளோம். என்ன வசதி செய்தார்கள் என்று தெரியவில்லை.

— கௌசல்யா

# சாண்டில்யனுடன் ஒரு சண்டை!



சாண்டில்யனுக்கும் எனக்கும் இடையில் காரசாரமான ஒரு தொடர் விவாதம் துக்ளக் பத்திரிகையில் நடந்தது. எனது வாதங்களை பி. எஸ். ராமையாவே ரசித்து வாழ்த்திக் கடிதம் எழுதினார். இதற்கு மறுபுறமாக சாண்டில்யனிடம் நான் நன்றாக மூக்குடைபட்டதாகக் கடிதங்கள் எழுதியவர்களும் உண்டு. ஆனால் விவாதத்தில் யாருக்கு வெற்றி என்பதை விட அதற்குப் பின் நடந்த நிகழ்ச்சி முக்கியமானது. கல்கியில் தொடர்கதை எழுதுமாறு சாண்டில்யனைக் கேட்க, கல்கி ஆசிரியர் என்ற முறையில் நான் போக வேண்டியிருந்தது. நான் தயங்கிக் கொண்டேதான் அவர் வீட்டில் அடியெடுத்து வைத்தேன். அவரோ முன்னெப்போதையும்விட அதிக அன்புடனும் மகிழ்ச்சியுடனும் என்னை வரவேற்று அமரச் செய்தார். அப்போதும் எனக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. ''என்ன, ரொம்பக் கோபமாக இருக்கிறீர்களா?'' என்று கேட்டு வைத்தேன்.

''எதற்காக இப்படிக் கேட்கிறாய்? துக்ளக் விவாதத்துக்காகவா? இதுபோன்ற கருத்து வேற்றுமைகள் காரணமாக உன்னிடம் எனக்குள்ள அன்பும் நட்பும் பாதிக்கப்படும் என்று நீ நினைத்தால் என்னை நீ தவறாக எடை போட்டிருக்கிறாய் என்று அர்த்தம்'' என்றார்.

நான் கூசிக் குறுகிப் போனேன். பிறகு மெதுவாக வந்த விஷயத்தை விளக்கினேன். ''கல்கியில் எழுதுவது என்பது எனக்குப் பெருமை'' என்றார் சாண்டில்யன். ''கல்கிதான் எனக்கு வழிகாட்டி. சரித்திர நாவல் என்பது வெறும் கட்டுக்கதை மட்டுமல்ல; அதற்கு ஆழ்ந்த ஆராய்ச்சியும் கடுமையான உழைப்பும் தேவை என்பதைச் சொல்லிக் கொடுத்தவர் அவர்தான். அவருடைய சரித்திரக் கதைகளைத் தாங்கி வந்த பத்திரிகையில் நான் எழுதுவது என்பது ஒரு பாக்கியம். முன்னெப்போதையும் விட கவனமாகவும் ஆர்வமாகவும் எழுதுவேன்'' என்றார். அப்புறம் கல்கி அவர்களைப் பற்றியும் அவருடன் பழகிய நாட்களைப் பற்றியும் நேரம் போனது தெரியாமல் பேசிக் கொண்டிருந்தார்.

ஆய்வுக்கு அவகாசம் கேட்டார் ஓய்வறியா சாண்டில்யன். குறிப்பிட்ட காலக் கெடுவில் எழுத ஆரம்பித்தார். ''என்னுடைய நாவல்களில் மிகச் சிறந்ததான இரண்டு அல்லது மூன்றைக் குறிப்பிடுவதென்றால் அதில் 'கடல் ராணி' ஒன்றாக இருக்கும்'' என்று என்னிடம் ஒரு சமயம் சொன்னார். கல்கியில் அவர் எழுதிய நாவல்களில் ஆபாசம் என்று கருதப்படக் கூடிய வர்ணனைகளையோ நிகழ்ச்சிகளையோ முற்றிலும் ஒதுக்கினார்.

சாண்டில்யன் தமது கதாநாயகிகளை அங்கம் அங்கமாக வர்ணித்த விதமும் சில படுக்கை அறைக் காட்சிகளை விவரித்ததும் (புல்வெளிகளே சமயத்தில் படுக்கை அறைகளாக மாறியதும் உண்டு!) அவருடைய அசாதாரண ஆய்வுத் திறனையும் எழுத்தாற்றலையும் திரையிட்டது போல் மறைத்து விட்டன என்பது எனது தாழ்மையான கருத்து. முக்கிய புள்ளிகள் கூட அவரை ஒரு ஜனரஞ்சக எழுத்தாளர் என்று கருதினார்களேயன்றி அவருடைய கதை சொல்லும் திறனையோ, கதாபாத்திரங்களின் குணசித்திரங்களைச் செதுக்கிய நேர்த்தியையோ, எழுத்து நடையின் அழகையோ உணராமல் போய் விட்டார்கள். அதனால்தான் பல பரிசுகளையும் விருதுகளையும் தமிழ்நாட்டிலேயே பெற்றிருக்க வேண்டிய அவரை, வேறு மாநிலம் விருதும் பரிசும் அளித்துக் கௌரவிக்கும் நிலை ஏற்பட்டது. பெண்களின் உடல் வர்ணனைகளையும் வேறு சில காட்சிகளையும் நீக்கிவிட்டாலும் கூட, அவரது கதைகள் பாமரரையும் கவர்ந்து, இலக்கியவாதிகளையும் வியப்புறச் செய்திருக்கும் என்பது இங்கு உணரப்படவில்லை.

'சித்தரஞ்சனி' என்று ஓர் அபூர்வ ராகத்தின் பெயரை அடுத்த நாவலுக்குத் தலைப்பாகத் தந்த சாண்டில்யன், எழுத்துக்கு அடுத்தபடியாக விரும்பியது கர்நாடக சங்கீதத்தை. இசைக் கச்சேரிகளை நன்றாக ரசித்ததோடு அருமையாக விமர்சிக்கவும் செய்வார். அவர் மகள் ஒருமுறை வாணி மஹாலில் கச்சேரி செய்த போது அவர் முகத்தைப் பார்த்தேன். மகிழ்ச்சிப் பெருமிதத்தை அவரால் மறைத்துக் கொள்ளவே முடியவில்லை! அவரது நாவல் ஒன்றுக்கு ஒரு கோடி ரூபாய் பரிசு கிடைத்திருந்தால் கூட இந்த முக மலர்ச்சியை அவரிடம் காண முடியாது என்று அப்போது எனக்குத் தோன்றியது.

— கி. ராஜேந்திரன்

புகைப்படம்: யோகா



# உள்ளம் கவர்ந்த கள்வன்

கதைப்பிரகாரம் ரேகா துடுக்குப் பெண்தான். ஒத்துக்கொள்கிறோம். அதற்காகத் தூங்கும் காவல்காரன் காலில் நாய்ச் சங்கிலி கட்டுவது, குளத்தில் நீராடும் பெண்களின் துணிகளை உருவிக்கொண்டு போவது, 'சின்னப்பையன்' தபால்காரரின் கடிதங்களை எடுத்துக் கொண்டு இஷ்டத்திற்குப் பட்டுவாடா செய்வது என்று ஏற்கெனவே வெளிவந்த ஒரு படத்தின் காட்சிகளை மனத்தில் வைத்துக் கொண்டு பட்டியலை நீட்டிக் கொண்டே போவது — சலிப்பு.

As usual ஒரு காதல் கதை.

அப்பா வி. கே. ராமசாமியும் (கத்துவதை கம்மி பண்ணவே மாட்டீர்களா சார்?) அம்மா மனோரமாவும் துடுக்குப் பெண் ரேகாவை ஊருக்குப் புதிதாய் வரும் ஆபீஸர் தலையில் கட்ட திட்டம் தீட்ட —

வருகிறார் பாண்டியராஜன். ஆபீஸருக்கு டிரைவரான அவரை ஆபீஸர் என்று நினைத்து வி. கே. ஆரும், மனோரமாவும் உருகு, உருகு என்று உருகி, ரேகாவை ரேக்கி, கடைசியில் பாண்டியராஜனுக்கும் ரேகாவுக்கும் இடையில் காதலைப் பிறக்க வைத்துவிடும் நேரத்தில் ஒரிஜினல் ஆபீஸர் நிழல்கள் ரவி ஆஜர்!

அப்புறமென்ன, வி. கே. ஆரும் மனோரமாவும் கட்சி மாறிவிட பாண்டியராஜனும், ரேகாவும் பிரிக்கப்பட — கதை அம்பிகாபதி — அமராவதி கால மாவு.

முறை மாமனாக உயரமாய் ஒரு வில்லன். பனைமரம்போல் அவ்வப்போது வந்து போவதோடு சரி. ஏதாவது திட்டம் தீட்டுகிறாரா.. அதற்காக அடியாட்களை வைத்துக் கொண்டு அலை மோதுகிறாரா, ஊஹூம் ஒன்றும் காணோம். இந்த வில்லனை மரம் திருடிய குற்றத்திற்காக டூப்ளிகேட் ஆபீஸர் போலீஸில் ஒப்படைப்பதாகக் காட்சி வேறு. முதலில் ஆள் மாறாட்டக் குற்றத்திற்காக பாண்டியராஜனை அல்லவா உள்ளே போட வேண்டும்? ரேகாவின் அந்தப் பேயாட்டம் ஓரளவு கலகல.

பாடல்களை நிறைய ரிகார்ட் பண்ணிவிட்டார்கள் போல. ஆரம்பத்தில் சில சம்பவங்கள். படத்தின் இறுதியில் சில சவசவ சம்பவங்கள். மற்றபடி, நடுவில் ஒரு வரி வசனம்; அப்புறம் ஒரு பாடல். இன்னொரு வரி வசனம்; ஒரு வேண்டாத சண்டை; அப்புறம் இன்னொரு பாடல். ஹரிதாஸ் படத்தை மனத்தில் வைத்துக்கொண்டு டைரக்டர் படம் பண்ணியிருப்பாரோ?

பாடல்கள் 'இசை மேதை' 'இசைச் சக்கரவர்த்தி' இளையராஜாவின் பெயரைக் கெடுக்காது.

பாண்டியராஜனைத் தனியாகப் பார்த்தால் ஒத்துக்கொள்ள முடிகிறது. ரேகாவுடன் ஜோடியாகப் பார்த்தால் அப்படி ஒன்றும் சரிப்பட்டு வராது போலிருக்கிறது.

மண்ணாங்கட்டியைக் காமெடி ட்ராக்கிற்காக இழுத்து வந்திருக்கிறார்கள். போன நூற்றாண்டு நகைச்சுவைச் சமாச்சாரங்களை வைத்துக் கொண்டு ஒப்பேற்றப் பார்த்திருக்கிறார்கள். ஆகக்கூடி மண்ணாங்கட்டி — சரளா, சச்சுவைப் பார்க்கும் போது மிஞ்சுவது சிரிப்பல்ல — பரிதாபம்!

காமிராக்கார அஷோக்குமார் — உம்!

டைரக்டர் அஷோக்குமார் — ஊஹூம்!

— ஜெயமன்மதன்

# ஜெயசக்தி ஃபைனான்சியர்ஸ்

(Hire Purchase Financiers)

கீழ்கண்ட வட்டி விகிதங்களில்
பிக்சட் டெபாசிட்டுகள்
வரவேற்கப்படுகின்றன.

| 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் |
|---|---|---|---|
| 15% | 19% | 20% | 21% |

தொடர்பு கொள்ளவும்

## ஜெயசக்தி ஃபைனான்சியர்ஸ்

(FIRM)

39, நடேசன் தெரு (2-வது மாடி)
சிவா-விஷ்ணு கோயில் அருகில்
தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494

திருச்சி : 22, மதுரை ரோடு, (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில்
திருச்சிராப்பள்ளி-620 008. போன் : 31376/33397

கோயமுத்தூர் : 666, ராஜா தெரு (முதல் மாடி) கோயமுத்தூர்-641001.
போன் :34369.

மதுரை : 41, வடக்கு வெளி வீதி, (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ்,
ஸ்டாப்பிங், மதுரை-625 001. போன் : 36004/34508.

பாண்டிச்சேரி : 11, நேரு தெரு, (கனரா வங்கி-எதிரில்) 2வது மாடி,
பாண்டிச்சேரி-605 001. போன் : 26493/26471.-

திருநெல்வேலி : 9-G, திலக் நகர், மதுரை ரோடு, திருநெல்வேலி-627 001.
போன் :25785.

தஞ்சாவூர் : 2 & 3 முதல் மாடி, ஜி.ஏ. கனால் ரோடு, தஞ்சாவூர்-613 001.
போன் : 21626/22286.

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு, (10-வது கிராஸ்) மல்லேஸ்வரம்,
பெங்களூர்-560 003. போன் : 366971.

கும்பகோணம் : 12, கிழக்கு சாரங்கபாணி தெரு, கும்பகோணம்-612 001.
போன் 22647.

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601.
போன் : 2483.

பட்டுக்கோட்டை : 121/B, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601.
போன் : 453.

LOTUS/JF/109

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்**
**கும்பகோணத்தில் 64 வது ஆசாரியாளின்**
**வருடாந்திர ஆராதனை**

காஞ்சி காமகோடி பீடம் 64 வது ஆசாரியாளின் வருடாந்திர ஆராதனை 24.10.87 அன்று நடைபெறவிருக்கிறது. இந்த ஆராதனை கும்பகோணம் காமகோடி பீடத்திற்கு அருகிலுள்ள அவரது அவதார கிருஹத்திலும் நடைபெறும். வழக்கம்போல் வடகோடி பிருந்தாவனம் அறக்கட்டளையின் சார்பில் நடைபெறும். இந்த ஆராதனை நடத்துவதற்குப் போதிய நிதி வசதி இல்லாததால் வழக்கம் போல் எல்லா பக்தர்களும் முன் வந்து பங்கேற்கும் மற்றும் தங்களாலான நிதி உதவி வழங்கி நடத்தப்படும் ஆராதனை. இந்த ஆராதனை 32 வேத பண்டிதர்களுடன் 12,000 ரூபாய் செலவில் நடத்தப்படுகிறது. ஒவ்வொரு வேத பண்டிதருக்கும் ரூ. 350/— க்குக் குறையாமல் சம்பாவனை செய்யப்படுகிறது.

தனியாகவோ இணைந்தோ இந்தச் சிரிய நற்பணிக்கு பக்தர்கள் தங்கள் நன்கொடையை டிமாண்ட் டிராப்ட், அல்லது மணியார்டர் மூலம் வடகோடி பிருந்தாவனம் அறக்கட்டளை 49, கல்யாணராமன் தெரு, கும்பகோணம் — 612 001 என்ற விலாசத்திற்கு 1987, அக்டோபர் 10 ஆம் தேதிக்குள் அனுப்பிவைக்கக் கோருகிறோம்.

**வடகோடி பிருந்தாவனத்தின் டிரஸ்டிகள்: மந்திரி ரத்னம், ஏ. ஆர். சேஷய்யா சாஸ்திரி, டாக்டர் ஆர். வெங்கட்டராமன், கும்பகோணம் புளியஞ்சேரி ஸ்ரீ வி. கிருஷ்ணமூர்த்தி அய்யர், கோனேரி ராஜபுரம் ஸ்ரீ ஆர். ஸ்ரீனிவாச அய்யர், டி. எஸ். குருமூர்த்தி, கன்வீனர்.**

---

**ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்று விருப்பம்**
**ஆனால் தவறாக பேசிவிடுவோமோ என்ற தயக்கம்....**
**இதுதானே உங்களது பிரச்சனை ?**

ஓரளவு கல்வித் தகுதியுடையவர்களிடம் கூட இக்குறை காணப்படுகிறது. இதற்கு என்ன காரணம்?

பள்ளிகளிலோ அல்லது கல்லூரிகளிலோ நாம் பயின்றது Written English. ஆனால் நடைமுறையில் நாம் பிறரிடம் சரளமாக உரையாடத் தேவைப்படுவது Spoken English.

எனவே முறையான பயிற்சி இருந்தால்தான் சரளமாகப் பேச முடியும். இக்கருத்தை மனதிற் கொண்டு விவேகானந்தா கல்வி நிலையத்தினர் நீங்கள் ஆங்கிலத்தில் சரளமாக உரையாடத் தபால் முறையில் மிகச் சிறந்த பயிற்சியளித்து வருகிறார்கள்.

இலக்கணப் பிழையின்றிக் கடிதங்கள் எழுத, அடுத்தவர்கள் வியக்கும் வண்ணம் ஆங்கிலத்தில் சரளமாக உரையாட விரும்புபவர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதினால் தகவல், புத்தகத்தை அனுப்பி வைக்கிறார்கள். நீங்களும் தொடர்பு கொண்டு பயன் பெறலாமே!

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லிரோடு, தி.நகர், சென்னை-17.**





வம்பு மார்க்கெட்:



# வீரப்பன் விழாவில் ஒரு வியப்பு!

## இரு பக்க இடி!

வலிமையான போராட்டம் ஒன்றுக்கு வன்னியர் சங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. இதில் அரசியல் ரீதியாக நேரடியாகப் பாதிக்கப்படுபவர் ஒருவர்தான் என்று அரசியல் நோக்கர்கள் கருதுகிறார்கள். அவர் வேறு யாருமல்ல; பலாப்பழ ஊர்க்காரர்தான்!

அவர் வன்னியர் குலப் பிரதிநிதி. 'முதல்வரிடமும், மத்திய அரசிலும் நிறைய செல்வாக்குள்ளவராகக் கருதப்படும் அவர், ஏன் தம் வன்னியர் குலத்துக்காகப் போராடி இந்தக் கோரிக்கைகளை நிறைவேற்றித் தரக் கூடாது?' என்று வன்னியர்குலப் பிரமுகர்கள் அவரைச் சாடுகிறார்கள். அதேசமயம், 'வன்னியர்குலத்தவர்களைத் தம் செல்வாக்கால் ஏன் கட்டுப்படுத்தத் தவறியிருக்கிறார்?' என்று கட்சித் தலைவர்கள் அவரைக் குற்றம் சாட்டுகிறார்கள்.

ஆக, இரு பக்க இடியாலும் இவரின் செல்வாக்குத்தான் தலைவலிக்குள்ளாகியிருக்கிறது.

## யார் பெரியவர்?

அரசியல்வாதிகளில் யார் பெரியவர் என்பதைக் கட்சி விளம்பரங்களில் இடம் பெறும் எழுத்துக்களின், போட்டோக்களின் அளவை வைத்துத்தான் கண்டுபிடிக்க முடியும். அதுவும் அ. தி. மு. க. வில் இது உறுதி செய்யப்பட்ட மரபு. அண்ணா பிறந்த நாள் விழாவை ஒட்டி, அரசு வாரியங்கள் வெளியிட்ட விளம்பரங்களில் — அண்ணாவின் படம் முத்திரை அளவு இருந்தது. ஆனால் எம். ஜி. ஆர். படமோ முழு சைஸில் இருந்தது. ஆக, இப்போது 'அண்ணா'வை விட எம். ஜி. ஆர்.தான் உயர்ந்தவர்!

அதேபோல் விழாவில் கலந்து கொள்வோர், பெயர்களில், நெடுஞ்செழியன், வி. வி. சுவாமிநாதன் இவர்களின் பெயர்களைவிட கொள்கைப் பரப்புச் செயலாளர் ஜெயலலிதாவின் பெயர்தான் 'பெரிய எழுத்தில்' இருந்தது! ஆக......

## 'வீ' விழாவில் ஒரு வியப்பு

சமீபத்தில் வீரப்பன் பிறந்தநாள் விழா கொண்டாடிய போது, சில வியப்பூட்டும் சமாசாரங்கள் தென்பட்டன. அவர் வீட்டில் தொண்டர்கள் மட்டும் மிக உற்சாகமாகக் குழுமியிருந்தார்களே தவிர, அவருடைய ஆதரவாளர்கள் என்று கருதப்பட்ட அமைச்சர்கள் வெளிப்படையாக வரவே இல்லை. கூட்டம் இல்லாத நேரத்தில் ஓரிருவர் வந்து தலையைக் காட்டிவிட்டுப் போனதோடு சரி. எல்லாவற்றிலும் வியப்பூட்டியது, போஸ்டர் சங்கதி. 'மதிப்புக்குரிய அண்ணன்' — 'மாண்புமிகு அண்ணன்' என்றெல்லாம் பலர் தம் பெயரால் போஸ்டர் ஒட்டியிருந்தபோது, அவருடைய வலது கரமாகத் திகழ்ந்த 'சைதை'யாரின் பெயரால் எந்தப் போஸ்டரும் ஒட்டப்படவில்லை.

ஏன்? விசாரித்தபோது கேள்விப்பட்டது: 'ஆர். எம். வீ. பேரில் சைதையாருக்கு அபிமானம் குன்றவில்லை. இன்னும் வீட்டு முன் அறையில் முன்பு போல் ஆர். எம். வீ. படம் இருக்கவே இருக்கிறது. தலைவர் அமெரிக்காவிலிருந்து வந்ததும் 'வத்தி' வைப்பவர்களிடம் மாட்டிக் கொள்ளக் கூடாது என்பதற்காகத்தான் வெளிப்படையாக எதுவும் செய்யவில்லை!

— ஒட்டக்கூத்தன் ஜூ




# கல்கி

1987 செப்டம்பர் 27
மலர் 46 இதழ் 9
பிரபவ புரட்டாசி 11




## அண்ணா அறிவாலயமும் ஜெயலலிதாவின் அறிவிப்பும்

அண்ணா, பெரியார், காமராஜர் போன்ற பெரியோர்களின் பிறந்த தினத்தையோ நினைவு நாளையோ கொண்டாடும் போது, அவர்களுடைய சிறப்பியல்புகளை எண்ணிப் பார்த்து நாம் அடக்கம் பெற வேண்டும். நம்மை நாமே செம்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். இதுவே சரியான அஞ்சலி.

ஆனால் நடப்பது என்ன வெனில் ஒரு தலைவரின் பிறந்த நாளைக் கொண்டாடும் அரசியல் கட்சி, தனது பலத்தைக் காட்டுவதே முக்கியம் என்று கருதுகிறது. இந்தப் பலப் பரீட்சையில் பல்வேறு கட்சிகளும் ஈடுபடும் போது மூலவரைக் கூட மறந்து போய் உற்சவர்களுக்கே முக்கியத்துவம் அதிகரித்து விடுகிறது! இந்தப் போட்டா போட்டியினிடையில் சிக்கி, பொது மக்களும் அவதிக்குள்ளாக நேர்கிறது.

அண்ணா அறிவாலயம் ஒரு மகத்தான சாதனை. ஒன்றும் இரண்டும், ஐந்தும் பத்துமாக நிதி திரட்டி, தி. மு. க. தொண்டர்கள் ஆயிரமாயிரமாகத் தங்கள் தலைவரிடம் தந்தார்கள். கருணாநிதியும் திருமணங்களுக்குச் சொற்பொழிவாற்றத் தாம் வசூலித்த பணத்தையெல்லாம் சேர்த்து அறிவாலயத்துக்கே வழங்கினார். மொத்தத்தில் ஒரு கோடியே முப்பது லட்சம் செலவில் அண்ணா அறிவாலயம் சென்னை நகருக்கே அழகுசேர்க்கும் ஓர் அற்புதக் 'கட்டடமாக வடிவமெடுத்திருக்கிறது. இந்த அறிவாலயத்தில் அண்ணாவின் நூல்கள் எல்லாம் போற்றிப் பாதுகாக்கப்படும் என்பதுடன், பொது நூலகம் ஒன்றும் உருவாகும். அண்ணாவின் லட்சியங்களைக் குறித்து ஆய்வு நடத்த வசதிகள் செய்து தரப்படும். ஒரு குழந்தைகள் இல்லமும் நடத்தப்படும். இப்படி சில பல திட்டங்கள் விவரிக்கப்பட்டுள்ளதைக் காண மகிழ்ச்சியாக உள்ளது. ஆனால் —

ஓரிடத்தைக் கடக்க ஒன்றரை மணி நேரம் ஆன ஒரு மாபெரும் ஊர்வலம் அவசியமா? இதனால் போக்குவரத்து ஸ்தம்பித்துப் போக, ஏராளமான மக்கள் அவதிப்பட்டதைத் தவிர்த்திருக்க முடியாதா? அப்படியே ஊர்வலம் அவசியம் என்றாலும் அதை ஒரு விடுமுறை தினத்தில் வைத்துக் கொண்டிருக்கக் கூடாதா என்றெல்லாம் கேள்விகள் எழுகின்றன. இன்னொரு பக்கம் பார்த்தால் தி. மு. க. தொண்டர்கள் இந்த ஊர்வலத்தில் கலந்து கொள்வதற்குச் சென்னைக்கு வரும்போது ரயிலைச் சங்கிலி பிடித்து இழுத்துக் கண்ட கண்ட இடத்தில் நிறுத்தியதோடு அல்லாமல், ரயில் நிலையங்களில் உணவு விடுதிகளையும் சூறையாடியிருக்கிறார்கள்.

ஒரு பெரிய கல்யாணம் நடக்கும்போது பச்சடியில் உப்புப் போதவில்லை என்று குறை கூறிக் கொண்டிருக்கக் கூடாதுதான். ஆனால் பாயசமே கசந்து வழியக் கூடாதல்லவா? அண்ணா அறிவாலயம், உணர்ச்சிக் கொந்தளிப்புகளை அடக்கிக் கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டை வளர்க்கும் யோக நிலையமாகவும் விளங்க வேண்டும்.

தி. மு. க. வுடன் போட்டி போட்டுக் கொண்டு அ. தி. மு. க. காஞ்சிபுரத்தில் விழா எடுத்தது. இதில் பேசிய ஜெயலலிதா, 'எம். ஜி. ஆருக்கு அமெரிக்காவில் நடந்த சிகிச்சைக்கான முழுச் செலவுகளையும் அ. தி. மு. க. கட்சியே ஏற்கும்; மக்களின் வரிப் பணம் இதற்குச் செலவாகாது' என்று அறிவித்தது ஆரோக்கியமான பேச்சு. சொன்னதைச் செய்து காட்டுவார் என்றும் நம்புகிறோம். ஆனால், 'ராமனிருக்குமிடம் அயோத்தி என்பதுபோல், எம். ஜி. ஆர். இருக்குமிடமே தமிழகத் தலைநகர்' என்று அவர் கூறியது தவறான கொள்கைப் பரப்புதலாகிறது! ராமன் அயோத்தியை விட்டுக் காட்டுக்குச் சென்ற போது அரச பதவியை முற்றிலும் துறந்துவிட்டு மரவுரி தரித்துப் போனான். தம்பி பரதனையே முழு அதிகாரங்களுடன் நாடாளச் செய்தான். காட்டிலிருந்தபடி அவன் அயோத்தியை ஆள முற்படவில்லை. ராமனிருக்குமிடம் அயோத்தியாகத் தென்பட்டது அவனுடன் இருந்த சிதைக்கும் இலக்குவனுக்குமே. அத்தகைய மனப்பக்குவத்தை அவர்கள் வளர்த்துக் கொண்டிருந்தனர்.

எம். ஜி. ஆரும் தமது உடல் நலனை உத்தேசித்து ஆட்சியில் ஒரு மாற்று ஏற்பாட்டைச் செய்ய முன் வருவதே அந்த இதிகாச ராமச்சந்திரனைப் போல் நடந்து கொள்வதாகும்.

தமிழ்த் திருநாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# அறிந்துப் பார்த்தோம்; சொல்கிறோம்!



• சாந்தி காதில் பூ.

• வேதவல்லி



• ஆண்டுதோறும் தரம் குறையும் பள்ளி.



• பாலாற்றங்கரை ஓரத்தில் காவித்தண்டலம் என்னும் கிராமம். பாலாற்றைக் கடந்தால் செங்கல்பட்டு. சுமார் ஆறு கி. மீ. தூரம்தான். ஆனால் ஆற்றைக் கடக்க ஒரு பாலம் வேண்டாமா? அதுதான் இல்லை. அதனால் காவித்தண்டலத்தைச் சுற்றியுள்ள சுமார் பதினைந்து கிராமங்களிலுள்ள மக்கள் சுமார் இருபத்தைந்து கி. மீ. தூரம் சுற்றிக் கொண்டு செங்கல்பட்டு வர வேண்டியுள்ளது. அந்த ஹிம்சை ஒழிய அங்கு தேவை ஒரு பக்கா பாலம் அல்ல; வெறும் தரைப்பாலம். இது பற்றி அம்மக்கள் பலமுறை புலரிடமும் மனுக் கொடுத்து விட்டார்கள். விடிவு காலம்தான் இல்லை!

• ஜி. எஸ். டி. ரோடு மற்றும் ரயில்வே ஸ்டேஷனின் இரண்டு புறங்களிலும் பிரம்மாண்டமாய்ப் பரவியுள்ள தாம்பரம், சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு, முழுக்க முழுக்க ஒரு புறம்போக்குப் பகுதிதான்

என்றால் புலருக்கு ஆச்சரியமாய் இருக்கும். (சென்னை கிறித்துவக் கல்லூரி, விமானப் படை நிலையம் ஆகியவை விதிவிலக்காகப் பட்டா பெற்றவை) இதில் இன்னும் கூட பலருக்கு — குறிப்பாக — அசோகநகர், ஆதிநகர், ரங்கநாதபுரம், கஸ்தூரிபாநகர் வாசிகளுக்கு இன்னும் பட்டா செய்து தரப்பட வில்லை. 48—ம் ஆண்டில் ஒரு நாள் எல்லோரையும் பட்டா இல்லை என்று வெளி யேற்ற உத்தரவு போட்டபோது அப்போது முதல்வராய் இருந்த காமராஜர், வாய்மொழி யாய், 'ஒரு ஆக்ஷனும் வேணாய்யா. அவங்க வங்களும் அப்படியே இருக்கட்டும்...' என்று சொல்லிவிட நடவடிக்கை எடுக்கப் படவில்லை. அப்போதும் பட்டா தரப்பட வில்லை. பிறகு முதல்வரான கருணாநிதி ஆளுக்கு மூன்று சென்ட்டை மட்டும் பட்டா செய்து கொடுக்க, அதிலும் பலருக்கு பட்டா கிடைக்காமல் குளறுபடி! எம். ஜி. ஆர் வந்த தும் ஏதோ கணக்குப் போட்டு, ஆளுக்கு எட்டாயிரம், பத்தாயிரம், பதினைந்தாயிரம், இருபதாயிரம் என்று கட்டச் சொல்லி அதி காரிகள் உத்தரவுபோட, பலர் இப்போது கோர்ட்டுக்கு நடந்து கொண்டிருக்கிறார் கள்...'' என்றார் அசோக நகர் வாசியான சி. முனுசாமி.

● நடுத்தர மக்கள் வாங்கும்படியான விலையில் பிளாட்டும் கிடைத்து, பத்து, இரு பது அடியிலேயே தண்ணீரும் கிடைத்தால் மகிழ்ச்சியாய்த்தானே இருக்கும். இந்த மகிழ்ச்சிக் கனவுடன்தான் கிழக்குத் தாம் பரத்தின் ஆனந்த புரத்தில் (பெயரை கவ னித்தீர்களா?) மூன்றும், நான்காம், ஐந்தாம் குறுக்குத் தெரு வாசிகள் எல்லாம் வீடுகட்டிக் கொண்டார்கள். ஆனால் அவர்களுக்கு உள்ள பிரச்னை குடி தண்ணீர்தான். ஆமாம்! கிணற் றில் தாராளமாய் கிடைக்கும் தண்ணீர் துணி துவைக்கக் கூட லாயக்கில்லாதது. தாம்பரம் நகராட்சியில் முறையிட்டுப் பார்த்துவிட் டார்கள்; பயனில்லை. ''மற்ற பகுதிகளில் ஒரு நாள் விட்டு ஒரு நாள் சில மணி நேரம் வரும் குழாய்த் தண்ணீர் கூட, இங்கே வரு வதில்லை...'' என்றார் அப்புகுதியிலுள்ள பத்மினி.

● அம்பத்தூர் ரயில் நிலையத்துக்கு அருகில் உள்ள லெவல்கிராசிங் பகுதியில் காய் கறி, மீன், பழ வியாபாரிகளின் ஆக்ரமிப்பு. நேரில் பார்த்தால்தான் முழுப்பரிமாணமும் தெரியும்; அத்தனை நெரிசல். இதைத் தவிர்க்க அம்பத்தூர் நகராட்சி என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது என்கிறீர்களா? ராமசாமி முதலியார் பள்ளியை அடுத்துள்ள சாலையில் போனால் தெரியும். வரிசையாய், சிறு சிறு கடைகளாய்ச் சுமார் மூன்று டஜன் கட்டி யுள்ளது. ஆனால் வியாபாரிகளைத்தான் அங்கே காணோம். நகராட்சி கட்டிவைத்த ஆஸ்பெஸ்டாஸ் கூரை போட்ட கட்டடம் சும்மா கிடப்பானேன் என்று அக்கம்பக்கத் தவர்கள் அவற்றை இப்போது 'நெம்பர் டூ' போவதற்குத்தான் பயன்படுத்திக் கொண் டிருக்கிறார்கள்.

● பல்லாயிரம் ரூபாய் செலவுசெய்து, அம்பத்தூர் டவுன்ஷிப் நகராட்சி, பாடியி லுள்ள டி. எம். பி. நகரில் ஒரு தாய் — சேய் நல விடுதியைக் கட்டியுள்ளது. அதில் இன்னும் ஒரு டெலிவரி கூட ஆகவில்லை. காரணம், கட்டிமுடிக்கப்பட்டுப் பல ஆண்டு



• காஞ்சி: ஏகாம்பரநாதர் கோவில்.

களாகியும் இன்னும் அது திறக்கப்படவே இல்லை!

● திருவொற்றியூரின் பல்வேறு பகுதிகளிலு மாகச் சுமார் பதினைந்து சமூகநல மன்றங்கள் செயல்பட்டு வருகின்றன என்பதே ஒரு நியூஸ். இவை அனைத்தும் ஒன்றிணைந்தும் ஓர் அமைப்பை ஏற்படுத்தியுள்ளன. அத்தனை பேரும் ஒன்றுபட்டுக் குரல் கொடுத்தும் ஒரு பயனும் ஏற்படவில்லை. இன்றைக்கும் நக ரெங்கும் எடுத்துச் செல்லப்படாமல் ஆங் காங்கே குவிந்து கிடக்கும் குப்பை; ரோட் டில் தேங்கிக் கிடக்கும் சாக்கடை நீர்; சத் துணவுக் கூடங்களுக்கு அருகில் உள்ள கொசு உற்பத்திப் பண்ணைகள்; சாக்கடை நீர் குடிநீரில் கலப்பதன் மூலம் மலேரியா,

* திருமழிசை: தானாகவே உடைந்து போன சாக்கடைக் கால்வாய்.



* திருவொற்றியூர்: சைக்கிளில் கூடப் போக முடியாத வீதி.



* வேணுகோபால்





* முனுசாமி



* திருநின்றவூர் அரசு உயர்நிலைப் பள்ளி: மாட்டுத் தொழுவத்தைவிட மோசம்.

யானைக்கால், மஞ்சள் காமாலை போன்ற நோய்களால் தாக்கப்படுதல், சாலை மட்டத்திலிருந்து அரை அடி மேலேயுள்ளதால், இரவு நேரங்களில் விபத்துக்களை ஏற்படுத்தும் மேன் — ஹோல் மூடிகள்; நகராட்சிக்கென தனி இறைச்சிவெட்டும் இடமில்லாததால், ரோட்டோரங்களிலேயே வெட்டப்படும் கோரம்; அவ்வப்போது அறுந்து விழுந்து மனிதர்களையும், மிருகங்களையும் உயிரிழக்கச் செய்யும் மேலே செல்லும் மின்சார ஒயர்கள்; காலாடிப் பேட்டையில் தினமும் சர்வ சகஜமாய் நடக்கும் கத்திமுனைக் கொள்ளைகள்... என்று குறைகளின் பட்டியல் நீண்டு கொண்டே போகும் பரிதாபம்தான்!

* *1983—84 இல் இருபது சதவீதம்.*
  *1984—85ல் பதின்மூன்று சதவீதம்.*
  *1985—86ல் எட்டு சதவீதம்*
  *1986—87ல் எட்டேமுக்கால் சதவீதம்.*

இது என்ன விவரம் என்கிறீர்களா? புகழ் பெற்ற புகழேந்திப் புலவர் பிறந்த ஊரான பொன்விளைந்த களத்தூரில், அவரது பெயரிலேயே உள்ள உயர்நிலைப் பள்ளியின் எஸ். எல்.சி. தேர்ச்சி விவரம்தான் இது. "எட்டாம் வகுப்புப் பையனுக்குத் தன் பெயரை இங்கிலீஷில் எழுதத் தெரியாது. ஆறாவது பையன் தமிழைக் கூடத் தட்டுத் தடுமாறித்தான் படிப்பான். தப்பில்லாமல் பன்னிரெண்டாம் வாய்ப்பாடு சொல்லத் தெரியாது சார்! எங்கேயாவது உடற்பயிற்சி ஆசிரியர் பூகோள வகுப்பு நடத்திப் பார்த்திருக்கிறீர்களா? இங்கே நடக்கிறது சார்! இதற்குத் தலைமை ஆசிரியரின் பொறுப்பின்மைதான் காரணம்..." என்று குற்றம் சாட்டினார், அந்த ஊரிலேயே பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கு குருகுலம் வைத்து டியூஷன் சொல்லிக்கொடுக்கும் ரிடையர்டு ஸ்டேஷன் மாஸ்டர் வேணுகோபால்.

பள்ளித் தலைமையாசிரியர் ஓ. என். சக்தி ஜகதீசனைச் சந்தித்தோம். "சார்! நாங்கள் பத்திரிகைகளுக்குப் பேட்டி தரக்கூடாது. ஆனால் எங்களுக்கும் பிரச்னைகள் உண்டு. ஆசிரியர் பற்றாக்குறை. ஒரு வகுப்புக்கு எண்பது. தொண்ணூறு மாணவர்கள் என்றால் எப்படி சமாளிப்பது? கட்டுரை

நோட்டுகளை எப்படித்திருத்துவது?'' என்றார் தலைமை ஆசிரியர்!

● திருநின்றவூரிலுள்ள அரசு உயர்நிலைப் பள்ளிக் கூடத்தைப் பார்த்தோம். சத்திய மாகச் சொல்கிறோம்... மாட்டுத் தொழு வத்தை விடவும் மோசம். சென்னை மாநகரை ஒட்டியிருக்கிற இந்த ஊர்ப் பள்ளியே இப் படி என்றால், குக்கிராமங்களைப் பற்றிக் கேட்பானேன்?

● சுமார் 15,000 பேர் வாழும் திருமழி சைக்கு மட்டும் பிரச்னைகள் இல்லையா? திருமழிசைக் காரரும் வார்டு உறுப்பினரு மான ஆர். கே. சம்மந்தனைச் சந்தித்தபோது ''தன்னிறைவுத் திட்டத்தின் மூலம் கடந்த 82 ஆம் ஆண்டில் சுமார் நான்கரை லட்சம் செலவில் திறந்த வெளிக் கழிவு நீர்க் கால்வாய்கள் அமைத்தார்கள். சரியானபடி அமைக்காததால், கழிவு நீர் வெளியேற முடி யாமல் தேங்கி நிற்க ஆரம்பித்து விட்டது. அதனால் மக்களே அதைப் பல இடங்களில் மூடிவிட்டார்கள். இன்னும் சில இடங்களில், தாமாகவே இடிந்துபோய் விட்டது. அந்த அளவுக்குக் கெட்டி போங்கள்...'' என்று கொட்டித் தீர்த்தார். மேலும், ரோட்டில் மண் வாரிச் செல்லும் லாரிகள் அதிகபட்ச வேகத் துடன், அபரிமிதமான வேகத்தில் செல்வதால் அடிக்கடி விபத்துக்கள் ஏற்படுகின்றன. ஒன்றிரண்டு ஸ்பீடுபிரேக்கர்கள் போட வேண்டியதும் அவசியம்'' என்றார். கடைசி யாக அவரிடம் நாங்கள் விடை பெற்றுக் கொண்டு திரும்பியபோது, அங்குள்ள காந்தி சிலையின் காதுகளில் யாரோ பூச்சுற்றியி ருந்ததைப் பார்த்தோம். ஆயிரம் பக்கங்கள் எழுதினாலும் சொல்ல முடியாத விஷயத்தை அந்த நபர்தான் எத்தனை 'சிம்பாலிக்'காகச் சொல்லிவிட்டார்! சபாஷ்!

● செங்கல்பட்டில் வசிக்கும் பெண்மணியான திருமதி வேதவல்லி வேதனையுடன் நம்மிடம் சொன்னது: என் மகன் கிருஷ்ணசாமி 1982—ல் இறந்து போனான். அவனைத் தகனம் செய்ய செங் கல்பட்டு சுடுகாட்டுக்குக் கொண்டுபோன போது, வெட்டியான் கேட்டது ரூ350. 83 ஜூன் மாதம் எங்கள் வீட்டில் இன்னொரு சாவு. அப்போது வெட்டியான் கேட்டது ரூ 450. இந்த வருடம் ஜூன் மாதம் என் கண வரை இழந்தேன். அப்போது வெட்டியான் அறுநூறு ரூபாய் கொடுத்தால்தான் மேற் கொண்டு காரியங்கள் நடக்கும் என்று அடா வடித்தனம் செய்தான். அப்புறம் பேரம் பேசி, 510 ரூபாய்க்கு வந்தான். இத்தனைக் கும் அவன் செய்த வேலை என்ன தெரியுமா? ரூபாய் இருபதோ இருபத்தைந்தோ செலவு செய்து வறட்டி வாங்கி அடுக்கினதுதான். இத்தனைக்கும் வெட்டியான்கள் முனிசி பாலிடி ஊழியர்கள்தானே? தவிர, சுடு

## அடுத்த இதழில்...



# 'ஜன கல்யாண்' புதிய இயக்கம் தொடங்கும் ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் பேட்டி

காட்டில் கட்டணம் பற்றியாதொரு அறிவிப்பும் இல்லை. இதையெல்லாம் யாரிடம் போய் முறையிட? எப்படித்தீர்க்க?

இது மட்டும்தான் செங்கல்பட்டிலுள்ள பிரச்னை என்பதில்லை. அங்கு ஓர் பஸ் ஸ்டாண்டு கட்டி முடிக்கப்பட்டும் தி. மு. க. — அ. தி. மு. க. — குடுமி பிடி சண்டையால் இன்னமும் திறக்கப்படாமல் பஸ்களெல்லாம் நிற்பதற்கு இடமின்றித் தவிப்பது ரொம்பவும் வேதனையான விஷயம்.

செங்கல்பட்டு மாவட்டம் பற்றி வந்த கடிதங்களுள் சில, பாலாற்றுப் படுகையிலிருந்தும் குஸஸ்தலை ஆற்றிலிருந்தும் லாரிகளில் மணல் வாரிச் செல்வது பற்றி! மணலை வாரிக் கொண்டே செல்வதால் ஆறு பள்ளமாகிக் கொண்டே போகிறது. ஆகவே ஆற்றின் நீர் ஊற்றுக்குப் பாதகம் விளையுமோ என்று இவர்கள் கவலை தெரிவித்திருந்தனர். மணல் வாரிச் செல்லப்படுவதை எங்கள் மாவட்டச் சுற்றுப்பயணத்தின் போது நாங்களும் பார்த்தோம். இதன் விளைவுகள் பற்றி நிலத்தடி நீர் வல்லுனரான என். ராஜகோபாலனைச் சந்தித்துப் பேசினோம். ''இப்படி மணலை வாரி எடுத்துச் செல்வது பற்றி யாரும் கவலைப்படவே தேவையில்லை. ஆற்றின் நீண்ட படுகைப் பகுதி முழுமையிலிருந்தும் மணலை வாரி எடுப்பதென்பது சாத்தியமில்லாதது. ரோடுக்கு அருகிலுள்ள சில இடங்களிலிருந்து, லாரிகள் மணல் எடுத்துச் செல்லலாம். இதனால் அந்த இடம் பள்ளமாகலாம். சாதாரணமாக ஆறுகளில் இந்த மணல் படுகை என்பது சுமார் 10 — 15 அடி ஆழத்துக்கு இருக்கும். மழைக் காலத்தில் தண்ணீர் வரும்போது, புதிதாய் அடித்து வரப்படும் மணல் இந்த இழப்பை ஈடுசெய்து விடும். அதுமட்டு மின்றி, மணல் வாரப்படாத மற்றமேடான பகுதிகளிலிருந்தும், இந்தப் பள்ளமான பகுதிக்கு மணல் அடித்து வரப்பட்டுச் சமன் செய்யப்படும். எனவே, இந்த மணல் வாரும் விஷயம், ஆற்றின் ஊற்றுச் சக்தியை எந்த விதத்திலும் பாதிக்காது. இதுபற்றி அஞ்சவும் தேவை இல்லை,'' என்றார் அவர்.

- கடைசியாகக்காஞ்சிபுரம். இங்குகுடிநீர்த் தட்டுப்பாடு இல்லை என்பது பாராட்டப்பட வேண்டிய விஷயம். எனினும் சாலைப் பராமரிப்பு மற்ற ஊர்களைப் போலவே படு மோசம். மன ஆறுதலுக்காக ஏகாம்பர நாதர் கோயிலுக்குப் போனாலும், சரியான பராமரிப்பின்றி அழிந்துவரும் புராதன மண்டபங்கள் மனத்தைப் பிழியும் நிலைதான்.

— எஸ். சந்திரமௌலி

# இந்தக் கதவு எப்படியும் திறக்கும்!



- இந்நாட்டு மன்னனாகவே
என்னை நினைக்கிறேன்;
கடத்தல் மன்னர்களால்
என் கிரீடமும்
திருவோடானது.

- பொற்காலத்தை நோக்கியே
போகத் தொடங்கினேன்.
கடைசியில்தான் தெரிகிறது
சுற்காலத்திலேயே
என் காலம் கழிவது.

- புனிதனாக அல்ல,
மனிதனாக வாழவே
முடிவு செய்தபோது
என் குடிசையும்
கோவணமும்
பறிபோன பரிதாபம் நடந்தது.

- எனது மனக்குகையில்
சிங்கம் கர்ஜிக்கிறது
இந்தக் கதவுகள்
எப்படியும் திறக்கும்.

— மு. வீரையன்

வேண்டும்போதெல்லாம் சுவைத்திட
மொரு மொரு பிஸ்கட்
போர்ன்விடாவின் குணம் நிறைந்தது!







சந்தேகமென்ன! காட்பரிஸ் தயாரிப்பேதான்!

**காட்பரிஸ்**
**போர்ன்விடா**
**பிஸ்கட்**

Avenues HC 290 87



"என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித்தர நான் முடிவுசெய்தது ஏனென்றால்."

அந்த நாட்கள் எனக்கு இன்னும் நினைவிருக்கு. அப்போது எனக்கு என் மகள் வயதிருக்கும். மாதத்தில் அந்த 5 நாட்களை எத்தனை கடினமாக கடந்தேன்... சங்கடம், தொல்லை, சிரமம். அதைவிட மோசம் என்னவென்றால் எங்கள் காலத்தில் வீட்டுத் தயாரிப்புகளையே உபயோகித்தோம். அது தர்மசங்கடமாயிருக்கும். அதைத் துவைத்து காயப் போட்டு போதும் போதும் என்றாகிவிடும். ஆனால், இப்போது காலம் மாறிவிட்டது.

நான் வாழ்ந்த காலம் வேறு. அதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட காலத்தில் வாழ்கிறாள் என் மகள். இக்காலப் பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட மிகத் துடிப்போடு செயல்பட வேண்டியுள்ளது. எங்கள் காலத்தை விட இப்போது, மாறிவரும் உலகிற்கேற்ப பண்படங்கு சுறுசுறுப்புடன் இயங்க வேண்டியுள்ளது. ஆகவேதான், என் மகளுக்கு நான் கேர்ஃப்ரீ தேர்ந்தெடுத்தேன். காரணம், நான் இளம் பெண்ணாக இருந்தபோது அனுபவப்பட்டதைப் போல், என் மகளும் சிரம்ப்படக் கூடாதல்லவா.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். நான் அந்தக் காலத்தில் செய்தது போல் என் மகள் துவைத்துக் காயப் போட்டு சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையானபோது ஒவ்வொரு முறையும் புத்தம் புதிய சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம். ஒரு தாயாகிய எனக்கு எது முக்கியம் என்றால், கேர்ஃப்ரீ மிகமிக சுகாதாரமானது என்பதுதான்.

உலர்வும் சுகமும்

அது, கனமில்லாமல் மெல்லியதாக அடக்கமாக இருந்தாலும் என் மகளுக்கு தேவையான பாதுகாப்பைத் தருகிறது. மாத விலக்கை நாப்கினுள் விரைவாக உறிஞ்சிக் கொள்ளக்கூடிய அது, நன்கு அதிகம் உறிஞ்சும் அடுக்குகள் கொண்டது. அது எப்போதுமே உலர்வான உணர்வோடும் வசதியாகவும் வைத்துக் கொள்வதாக என் மகளே கூறுகிறாள். அது மட்டுமா, கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜும் (கூடுதலான பெரிய நாப்கின்) உள்ளது.

நீண்ட, அகன்ற, தடிப்பான கேர்ஃப்ரீ எக்ஸ்டரா லார்ஜ், அவளுக்கு கூடுதல் பாதுகாப்பையும் பத்திரமான உணர்வையும் அளிக்கிறது— அந்த சங்கடமான நாட்களில் அல்லது அவளுக்கு



அது தேவைப்பட்டபோது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் வெளியில் சென்று சுற்றி வந்தாலும்கூட அவள் பாதுகாப்பாகவும், பத்திரமாகவும் உணர்கிறாள்.

ஆகவேதான், எங்கள் காலத்தில் கிடைக்காத ஒன்றை என் மகளுக்குத் தர முடிவதை எண்ணி பூரிப்படைகிறேன்... அதுதான் கேர்ஃப்ரீ வசதி...கேர்ஃப்ரீ பாதுகாப்பு. மாறிவரும் காலத்தோடு நாமும் மாற வேண்டாமா!

*கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்- இன்றைய மாறிவரும் உலகிற்கேற்ற முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு*




10 உள்ள பேக்கிலும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்கிலும் கிடைக்கிறது

**கேர்ஃப்ரீ. காரணம், காலம் மாறுவதற்கேற்ப அவளும் மாறுகிறாள்.**

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

OBM/9072/TAM

# நிற்க நிழல் வேண்டும்!

வாஸந்தி

## 9

டெட்டால் வாசனை நாசியைத் துளைத்து, விசித்திரமான உணர்வை ஏற்படுத்திற்று. ஜயசீலன் உலுக்கப்பட்டவன் போல கண்ணைத் திறந்தான்.

கையில் ஓர் ஆங்கிலப் பத்திரிகையுடன் ஸ்டூலில் அமர்ந்திருந்த பிரபு அவனைப் பார்த்துச் சிரித்தான்.

''ஆ: முழிச்சுக்கிட்டியா? தப்பிச்சேன்!''

அவன் என்ன சொல்கிறான் என்று ஜயசீலனுக்கு விளங்கவில்லை. சுற்றிலும் பார்வையைச் சுழற்றிய போது, தான் ஓர் ஆஸ்பத்திரியில் இருப்பது தெரிந்தது. எத்தனை நாட்களாக இருக்கிறோம் என்கிற திகைப்புடன் பிரபுவைப் பார்த்தான்.

''எதிலிருந்து தப்பிச்சீர்?''

''இரண்டு நாளா நீ கண்ணைத் திறக்கல்லே. இன்னிக்கும் திறக்கல்லேன்னா கோவிலுக்குப் போய் இருபத்திரண்டு தீர்த்தமாடறதா, சாமியோட ஒரு டீல் வெச்சிருந்தேன். காப்பாத்திட்டார்!''

''உம்மையும்!''

''எம்மையும்!''

பிரபு வாய் விட்டுச் சிரித்தான்.

''யோவ் ஜயசீலன்! இரண்டு நாளா நீ கண்ணை முழிக்கல்லையே தவிர, என்னமாய் ஒரு டயலாக் அடிச்சிருக்கே தெரியுமா, அதுவும் உன் யாழ்ப்பாணத் தமிழ்லே? எப்படியோ வார்த்தைகளை முன்னும் பின்னுமாக் கோத்து டைரியிலே குறிச்சு வெச்சுக்கிட்டேன். கால் பாகச் சரித்திரம் கிடைச்சிட்டது!''

ஜயசீலன் ஆயாசத்துடன் கண்களை மூடிக் கொண்டான். இவன் சொல்வது உண்மையாக இருக்கலாம். மயக்க நிலையில் நான் உளறியதிலிருந்து, இவன் என்ன புரிந்து கொண்டிருக்க முடியும்?

''என்ன ஆச்சு எனக்கு?''

''நல்ல ஜுரம்! நல்லவேளை எனக்கொண்ணும் ஆகல்லே. கேமராவைக் கூடக் காப்பாத்திட்டேன். நீ பார்க்கத்தான் கல்லுளி மங்கனுட்டம் இருக்கியே தவிர, ஆள் ஒரே லொப்பை. எதுவும் தாங்கல்லே





''உன் மனைவிக்கு முன்யோசனை மிருதின்னு எதை வெச்சுச் சொல்றே?''

''காலையிலே பாரு. நான் காய்கறி நறுக்கப் போனேன். உடனே 'முதலிலே புளியைக் கரைங்க. அப்புறம் காய்கறி நறுக்கலாம். காய்கறி நறுக்கும் போது விரலை அறுத்திட்டால் அப்புறம் புளியைக் கரைக்க முடியாதுன்னு சொல்லிடுவிங்கன்னு சொல்லிட்டா!''

— ஆர். மரகதம்.

உனக்கு!''

''இரண்டு நாளா இங்கேயே உட்கார்ந்திருக்கீரா?''

''ஆமாம்,'' என்றான் பிரபு லேசாக. ''மண்டபம் முகாம்லே உன்னைச் சேர்க்கிற வரை என் பொறுப்பு.''

''அது எங்கே இருக்கு?''

''பாம்பன் பாலத்தைத் தாண்டிப் போகணும். இங்கேயிருக்கிற அகதிகள் வரவேற்பு மையத்திலே இருக்கிறவங்க உன்னை அங்கே அனுப்ப ஏற்பாடு செய்வாங்க.''

'அகதி' என்கிற வார்த்தையே என்னவோ போல் இருந்தது. எதிலோ தோற்றுப் போன உணர்வை ஏற்படுத்திற்று. அவனை பலவீனப் படுத்திற்று. சீலியாவின் அப்பா கிளப்பிவிட்ட நம்பிக்கையை, அது மயிரிழை தான் என்று தெரிந்தும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு வந்தாயிற்று. நினைக்க நினைக்க அவன் எடுத்த முடிவு எத்தனை பைத்தியக்காரத்தனமானது என்று வெட்கமேற்பட்டது. இந்தப் பொடியனுக்குத் தெரியாது. நான் ஒரு கல்லுளிமங்கன்தான்.

''என்ன யோசனை சிலன்?''

''ஒண்டும் விளங்கல்லே!'' என்றான் அவன் அலுப்புடன். ''சொந்த ஊரையும் வீட்டையும் விட்டுப் பரதேசத்திலே அகதி என்ற அடையாளச் சீட்டோடு இருக்கிறது அத்தனை சந்தோஷ சமாசாரம் இல்லே!''

''சந்தோஷம்னு யார் சொன்னது? உயிருக்குப் பாதுகாப்பு இருக்கும் இல்லே? 'பாம்பர்' ஓசை கேட்டுப் பதுங்கு குழியிலே ஒளிய வேண்டிய அவசியமில்லேதானே?''

''அதுசரி, அப்படியாவது இந்த உயிரைக் காப்பாத்தணுமா?''

''அப்படிச் சொல்லாதே. உசிருன்னு வெல்லக் கட்டிதான். சொந்த அனுபவத்திலே சொல்றேன்!''

ஜயசீலன் சிரிக்காமல் தலையைக் குனிந்து கொண்டான்.

''என்னுடைய அனுபவம் உமக்கு இல்லே. உயிர் என்கிறதுக்கு மதிப்பே இல்லே இலங்கையிலே. போராளிக்கும் சரி, ராணுவத்துக்கும் சரி.''

''அது ஒரு 'இழக்கும் யுத்தம்' ஜயசீலன். அதிலே யாருக்கும் வெற்றி இருக்காது. இரண்டு பேருக்கும் தோல்விதான்.''

''நான் இங்கே வந்ததும் அந்தக் காரணத்தால்தான்.

''நீ இங்கே வந்தது ஒரு முக்கியமான காரியத்துக்காக! மறந்துட்டியா?''

''எப்படி மறக்க முடியும்? ஆனா என்னையே ஏமாத்திக் கொள்வதற்காக அதை ஒரு காரணம் என்று நம்பினேனோ என்னவோ!''

''எனக்குப் புரியல்லே!''

''அந்த இடிபாடிலேர்ந்து தப்பிக்க எனக்கு ஒரு காரணம் வேணும். வீட்டுச் சனங்க எல்லாரும் போய், சீலியாவும் போன பிறகு, அங்கே தனியாக இருக்க எனக்குப் பயம். ஆமி காம்பிலேருந்து சீலியா உயிரோடு தப்பியிருப்பான்னு, நான் இண்டைக்கும் நம்ப மாட்டேன்.''

''ஆனா, உண்மையைச் சொல்லு ஜயசீலன். சீலியாவை மறுபடி பார்ப்போம் என்கிற நம்பிக்கையிலேதானே நீ இருந்தே.''

ஜயசீலன் மீண்டும் சோர்வுடன் கண்களை மூடிக் கொண்டான்.

''ஆ, அதுக்கென்ன? வெட்கங்கெட்ட ஆசை அது. உயிரைத் தொடர்ந்து வாழறதுக்கு மனசே ஏற்படுத்தின நொண்டிச் சமாதானம்!''

''இதப்பார், நீ இப்படியே பேசிப் பேசி என் மூடை அவுட்டாக்காதே. ஒவ்வொரு பிறப்புக்கும் அர்த்தம் இருக்குன்னு எங்கப்பா சொல்வார்.''

''என்ன அர்த்தம் ஐயா!'' என்றான் ஜயசீலன் அலுப்புடன். ''இப்படித்தான் ஒரு பொய்யான மயக்கத்தைத் தமிழ் அரசியல்வாதிகள் பொடியன்களுக்கு உரையேத்தினாங்கள். தமிழின் பெருமை, தமிழனின் பண்டைப் பெருமை, அதைக் காக்க வேண்டிய கடமைன்னு வசனம் பேசி உண்மைகளைக் கவனிக்காம விட்டாங்கள். உண்மைகளைச் சந்திக்க வேண்டிய தருணம் வந்தபோது, பொடியன்களை ஆயுதமேந்தும் நிலைமைக்குத் தள்ளி விட்டு பத்திரமாத் தப்பி விட்டாங்கள். பிறவி எடுத்ததற்கான அர்த்தத்தைத் தேடிக்கிட்டு உயிரைவிட்ட பொடியன்கள் அநேகம். இது ஒரு வேள்வி என்ட்ற நினைப்பிலே மற்றவங்களைப் பலியிட்டதும் அநேகம். மெள்ள மெள்ள என்ன காரணத்துக்காகத் துவங்கப்பட்ட போராட்டம் இது என்று மறந்து போச்சு. உயிர் தப்பறது எப்படின்னு மக்களுக்குக் கவலே. தங்க பலத்தை நிலைநாட்டிக்கறது எப்படின்னு போராளிக்கு வெறி. ஜனத்தொகையிலே பன்னிரண்டு சதவீதக்காரனுக்கு (வடக்கு கிழக்கில் வாழும் தமிழர்களின் சதவீதம்.) இத்தனை திமிரான்னு சிங்களக்காரன் குண்டு வீசுறான், தான் பிறவி எடுத்தது சிங்கள மொழியையும் பௌத்த மதத்தையும் காக்கத்தான் என்கிற நினைப்பிலே!''

''சரி விடு... நீ கொஞ்சம் ரிலாக்ஸ் செய்யணும். உடம்பு எப்படி இருக்கு?''

# வண்ணங்களின் வசந்தம் இல்லங்களில் வீசட்டும்!

எண்ணற்ற வண்ணங்கள்! நினைவிலே நிற்கும் நீலம்,
மனதைக் கவரும் மஞ்சள், உள்ளம் கவரும் ஊதா,
பரவசமூட்டும் பச்சை... கருங்கக் கூறின்,
வான வில்லின் வண்ணங்களனைத்தையும்
அழகிய பல டிசைன்களில் வடித்து
வழங்கும் பிரபல பட்டுப் புடவை
ஷோரூம் : லக்ஷ்மி சில்க் ஹவுஸ்.

ஏர்-கண்டிஷன் வசதியிலே,
எத்தருணத்திற்கும் ஏற்ற பட்டுப்
புடவைகளை வசதியாகப் பார்வை
யிடுங்கள், திருமணத்திற்காகவும் சரி,
தினசரி அணிவதற்காகவும் சரி,
பல நெசவுக் கேந்திரங்களிலிருந்து
உருவான 30,000க்கும்
மேலான புடவைகளிலிருந்து
தேர்ந்தெடுங்கள்.

ஞாயிற்றுக்கிழமை
திறந்திருக்கும்.










## லக்ஷ்மி சில்க் ஹவுஸ்

பனகல் பார்க் எதிரே, மாடியிலே தி. நகர், சென்னை 600 017.

Our Associate: லக்ஷ்மி சில்க் ஹவுஸ்,
மாதுங்கா (மத்ய ரயில்வே), பம்பாய்-400 019.



Market Movers/LSH/937/87/TAM /A



''சிவப்பா ஒல்லியா ஒரு பெண்ணை எதிரே பார்த்தீங்களா? முப்பது வயசிருக்கும்...''

''கவனிக்கலையே...''

''நீலநிறப் புடவை கட்டி...''

''ஆமாம், ஆமாம். நீல நிற ஷிப்பான் புடவையும் அதே கலர்ல ஜாக்கெட்டும்... கழுத்துல கூட மெல்லிசாச் செயினும் காதுல நீலக் கல்லுப் பதிச்ச செண்பகப் பூ தோடும்...''

— தஞ்சை இறையரசன்.

''வடிவாத்தான் இருக்கு.''

பிரபு சிரித்தான்.

''அடேயப்பா அதுக்கு இப்படியொரு வார்த்தையா? ரைட்டோ. அக்னிதீர்த்தத்துக்குப் போய்க் கொஞ்சம் உட்கார்ந்துட்டு வரலாமா?''

''ஓ!''

''இரு. பக்கத்திலே ஓர் அருமையான காப்பி ஹோட்டல் இருக்கு. காப்பி வாங்கிட்டு வர்றேன்.''

ஜயசீலன் சற்று எழுந்து உட்கார்ந்தான். உடம்பு இன்னும் பலவீனமாகத்தான் இருந்தது. அது ஓர் அரசாங்க மருத்துவமனை என்று தோன்றிற்று. அடுத்தடுத்து நிறையக் கட்டில்கள் இருந்தன. பொதுவாகச் சுத்தம் தெரியவில்லை. அவனுக்கு யாழ்ப்பாணத்து ஜெனரல் ஆஸ்பத்திரி நினைவுக்கு வந்தது. எப்படிப்பட்ட நெருக்கடியிலும் சுத்தமாக இருக்கும். அதையும் ராணுவம் விட்டு வைக்கவில்லை. போராளிகள் அங்கே ஒளிந்திருக்கிறார்கள் என்கிற பிரமையத்தில் குண்டு வீசியது. எத்தனை சேதம் அன்று! அதைப் பற்றி ஆஸ்பத்திரியின் தலைவர் டாக்டர் இளங்கோவின் அலுவலக உதவியாளன் பாண்டியன் கதை கதையாகச் சொல்வான். விடுதலைப் புலிகளின் வீரப்பிரதாபங்களைக் கதைக்கும் அதே வேகத்துடன், குண்டு வீசப்பட்ட கட்டத்திலும் தடுமாறாமல், ஆஸ்பத்திரி வேலையைக் கவனித்த டாக்டர் இளங்கோவின் பெருமையையும் பாடுவான். நல்ல வேளையாக அவன் போராளிகளின் பெருமையைப் பேசுவதோடு நிறுத்திக் கொண்டான். இல்லாவிட்டால் இன்று யாழ்ப்பாணத்துத் தெருக்களில் மூலைக்கு மூலை தென்படும் புலிகளின் வீரமரணப் பெயர்ப் பட்டியலில் அவனுடைய புகைப்படமும் சேர்ந்திருக்கும்.

''இந்தா காப்பி!'' என்று ஒரு தம்ளரை நீட்டினான் பிரபு.

''இதுதான் அசல் காப்பி. உங்க ஊரிலே தேயிலைத் தூளைப் போடற மாதிரி காப்பித் தூளைப் போடறீங்களே அது இல்லே! அது கோப்பி!''

ஜயசீலனுக்குச் சிரிப்பு வந்தது. காப்பி ருசியாகத்தான் இருந்தது.

''நீங்கள் என்ன வேணும்னாலும் கதைக்கலாம். இது உங்க ராஜ்யம்!''

''அப்படி வா வழிக்கு. துண்டாலே முகத்தைத் துடைச்சுக்கிட்டு வா. நடக்க முடியுமான்னு பாரு. டாக்டரைக் கேட்டேன். ரொம்பத் தூரம் போக வேண்டாம்னார். ஆட்டோ ரிக்ஷா கொண்டு வந்திருக்கேன். அதிலே போயிட்டு வரலாம்.''

தெருவெல்லாம் சீராக இல்லை. ஆட்டோவில் போகும்போது உடலெல்லாம் நடுங்கிற்று. திடீரென்று சமுத்திரக் காற்று சில்லென்று அடித்தது. சந்தின் முனை திரும்பியதும் சிறிய மணற் பரப்பும் அதற்கப்பால் கருநீலக் கடலும் தெரிந்தன. ஆண்களும் பெண்களுமாக ஒரு சின்னக் கூட்டம் நீராடிக் கொண்டிருந்தது.

பிரபு அவனுடைய கையைப் பிடித்துக் கரையை ஒட்டிக் கட்டப்பட்டிருந்த குட்டைச் சுவரில் உட்கார வைத்தான்.

கடலைப் பார்க்கப் பார்க்க மனத்தில் பலவித உணர்வுகள் அலைமோதின. யாழ்ப்பாணத்தில் கடற்கரைச் சாலையில் நடந்து எத்தனையோ காலமாகி விட்டது. கலவரங்கள் துவங்கியபின் சாலையையே அடைத்து விட்டார்கள். முன்பு சீலியாவின் கையைப் பிடித்துக் கொண்டு ஆனந்தமாக ஓடியதெல்லாம் இப்பொழுது கனவாகப் போய்விட்டது. ஜஸ்டினைப் போலீஸ் பிடித்துக்கொண்டு போனதுமே, சீலியா வெளியே செல்வதை அவனுடைய அம்மா தடுத்து விட்டாள். முக்கியமாக அவனுடன் தனியாகச் செல்வதை. சீலியாவின் தம்பி ஜோஸப் சிறியவன். அவனை நடுவில் வைத்துப் பலமுறை அவர்கள் வீரசிங்கம் ஹால் வரையோ, வாசகசாலை வரையோ நடந்து வருவார்கள். கலவரங்களுக்கும் பீதிக்கும் நடுவிலும் எப்படிப்பட்ட ரம்மியமான நாட்கள் அவை!

''இங்கே தீர்த்தமாடினா குழந்தை இல்லாதவர்களுக்குக் குழந்தை பிறக்கும்னு ஐதீகம்!''

ஜயசீலன் பதில் ஏதும் சொல்லத் தோன்றாமல் நீராடிக் கொண்டிருந்த ஜனக்கும்பலையும் தொலைவில் தென்பட்ட மீனவப் படகுகளையும் வெற்றுப் பார்வை பார்த்தான். அவனுடைய சரித்திரம் வாய்விட்டுச் சொல்லக்கூடிய சரித்திரம் என்று தோன்றவில்லை. பல ஜன்மத்து நினைவுகள் ஒருசேரக் காட்டாறாய் நெஞ்சில் அலைமோதின. புலன்களை ஸ்தம்பிக்கச் செய்தன. எந்த நினைவு முன்னது எது பின்னது என்று புரியாத முடிச்சுகளாய் மனத்துள் பின்னின.

நல்லூர் கந்தசாமிக் கோவில் திருவிழாவும் ஊர்வலங்களும் மறியல்களும் — வீட்டு நடுக் கூடத்தில் அதிர்ந்து வரும் போலீஸ் ஜோடு களும் — பிடரியில் நெக்கப் பட்டு வேனில் தள்ளப்படும் பொடியன்களும் — பளபளக் கும் கண்களும் ஜுரப்பார்வையும் துவக்கை ஏந்தும் கைகளுமாய் வீட்டை விட்டு, சொந்த வாழ்வை விட்டுச் சொல்லாமல் கொள் ளாமல் வெளியேறும் தேவநேசன்களும் ஜஸ்டின்களும் —

முழங்கால்களுக்குள் முகத்தைப் புதைத்து கண்களை மூடிக் கொண்டாலும் அந்த இரு ளில் சவங்கள் விழுந்தன ஒவ்வொன்றாக...

"எனக்கு அடிக்கடி ஒரு கனா வருது பிரபு" என்றான் அவன் திடீரென்று.

பிரபு நிமிர்ந்து உட்கார்ந்தான்.

"என்ன கனா?"

"மேலே பாம்பர்களின் சத்தம் கேட்டுக் கொண்டேயிருக்கு. நானும் அப்பாவும் அம்மாவும் தங்கைகளும் அண்ணனும் பங் கரில் ஒளிந்து கொள்ள ஓடறோம். பங்கருக் குள் பதுங்கி இருக்கோம். வெளியிலேர்ந்து ராணுவக்காரர்கள் கூப்பிடறான்கள். முத லில் அண்ணனை, அண்ணன் வெளியே றுகிறான் மெள்ள. அவனைச் சுட்டுத் தள்ளு கிறார்கள். அலறிக்கொண்டு அம்மாவும் அப்பாவும் வெளியிலே ஓடுகிறார்கள். அவர் களையும் சுடுகிறார்கள். என் தங்கைகளைக் கூப்பிடுகிறான்கள். நான் உறைந்து கிடக் கறேன் ஐயா, எதுவும் செய்யமாட்டாமல். தங்கைகளும் வெளியேறிச் சுடப்படுகிறார் கள். 'இன்னும் யார் உள்ளே? வெளியே வா' எண்டு குரல் வருது. நான் அசைய இல்லே. பயத்திலே இறுகிப் போய் நிற்கிறேன். குழியை நோக்கிச் சுடுகிறான்கள். என் காலில் காயம் படுகிறது. பிறகு தொம் தொம் மெண்டு ஒவ்வொரு சடலமா குழிக்குள்ளே விழுகிறது. அந்த சவக் குழியிலே நானும் நிக்கறேன், இன்னொரு சவமா."

சற்று நேரத்துக்கு இருவரும் பேசவில்லை. நீண்ட நேர அனுதாப மௌனத்திற்குப் பிறகு பிரபு கேட்டான்.

"இது நிஜமான அனுபவமா ஜயசிலன்?"

"எனக்கு ஏற்பட்டதில்லே. பதினாலு வயசுப் பொடியன் ஒருத்தன் சிகிச்சைக் காகப் பரித்துறையிலிருந்து ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தான். அவண்ட கதை. ஆனால் இந்தக் கனா எனக்குத் தினமும் வருது."

இதற்கு என்ன சமாதானம் சொல்வது என்று குழம்பியவனாய்ப் பிரபு அவனுடைய தோளை மெல்லப் பற்றினான். பிறகு மிக மெதுவாகச் சொன்னான்.

"அப்ப சீலியா ஒருத்திதான் மிஞ்சியிருக் கான்னு சொல்லு!"

ஏதோ அமானுஷ்யமான வார்த்தை காதில் விழுந்தாற்போல், ஜயசிலன் திடுக்கிட்டான். பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு சொன்னான்.

"அவ மட்டும் எங்கே மிஞ்சியிருக்கப் போறா!"

"மண்டபத்துக்குப் போகிற வரை பேசாதே."

"அங்கே அவ இருப்பா என்று என்ன நிச்சயம்?"

"அங்கே இல்லேன்னா வேற எங்கே யாவது இருப்பா!" என்றான் பிரபு உறுதியாக.

"உங்க பிரச்னைக்கு ஒரு தீர்வு ஏற்பட்டுப் போச்சுன்னா மறுபடி யாழ்ப்பாணத்திலேயே நீ அவளைச் சந்திக்கலாம்!"

"நீங்க கிண்டல்தான் செய்யறீர். அங்கி ருக்கிற நிலைமையைப் பார்த்து உயிரைக் கையிலே பிடிச்சுக் கொண்டு வந்திருக் கீர். தீர்வு ஏற்படும் எண்டு நம்பிக்கை இருக்கா?"

"தீர்வு ஏற்படணும் ஜயசிலன். தீர்வு காண முடியாத பிரச்னைன்னு ஒண்ணு இருக்கா?"

"பிரச்னைக்கு எப்படிப்பட்ட முடிவானா லும் சந்தோஷத்தைக் கொடுக்காது. தமிழர் பாடு அதோ கதிதான். போராளிகள் ஆண் டாலும், சிங்களவர் ஆண்டாலும்!"

"அப்படிப்பட்ட நிலைமை ஏற்படாம தடுத்துடுவாங்க. உண்மை நிலவரம் என் னன்னு வெளிப்பேருக்குத் தெரியாம இல்லே. சும்மா பார்த்துண்டு உட்கார மாட் டாங்க."

ஒரே ஒரு விநாடி நம்பிக்கைக் கீற்றுப் பந்தாக மேலே எழும்பியது. எம்பிய மறு விநாடி கீழே இறங்கிற்று.

"ஆ, சும்மா கதைப்பாங்க. அவ்வளவு தான். உங்கள் தமிழ்நாட்டு அரசியல்வாதி கள் மேல எனக்கு நம்பிக்கை இல்லே. எங்க பிரச்னை அப்படியே இருக்கிறது அவங்க ளுக்குச் சாதகம்!"

"இந்த ஊர் அரசியலைப் பத்தி நான் பேச மாட்டேன். நான் தில்லிக்காரன்."

"தில்லி அரசு மட்டும் என்ன செய் தது?"

"இனிமே காலம் கடத்தாது. ஆதார பூர்வமா சில விஷயங்கள் பத்திரிகைக்காரன் என்கிற முறையிலே எனக்குத் தெரியும்."

ஜயசிலனுக்கு நம்ப முடியவில்லை. இதில் ஏதாவது உண்மையிருக்குமா? அதனால் தான் இவன் இப்போது துணிந்து யாழ்ப் பாணம் சென்றானா? அத்தனை சேதத்தைப் பார்த்தும் நம்பிக்கையுடன் இருக்கிறானா?

சட்டென்று பிரபு விறைத்து உட்கார்ந் தான். ஓர் அங்கமாக அவனுடனேயே இருக்கும் கேமராவை எடுத்துச் சற்றுத் தொலை வில் இருந்த யாரையோ படமெடுத்தான்.

"அதோ பார்... அந்த வெள்ளைச் சட்டை யும் பாண்டும் போட்டுக்கிட்டு இரண்டு பேர் நிக்கிறாங்களே. தில்லியிலே அரசாங்க உயர் அதிகாரிகள். அவங்க கூடப் பேசிக் கிட்டு நிக்கிறது உள்ளூர் போலீஸ் இன்ஸ் பெக்டரும் மீனவர் சங்கத் தலைவரும்."

இவனுடைய ஆர்வத்தில் எனக்குப் பங்கில்லை என்கிற அன்னியத்தனத்துடன் ஜயசீலன் தன் யோசனையில் மூழ்கிப் போனான்.

(தொடரும்)

# மண்ணோடு மனங்கள்



சரப்பாசி நிறைந்த அந்த ஆவணி மாதத்து அதிகாலையை ரசித்தபடி கழனி வெளியை நோக்கி நடந்தார் வேதகிரி. நேற்று மாலை பண்ணைக்குப் போக முடியவில்லை. மதுராந்தகத்தில் ஒரு முக்கியமான வேலை. இரவுதான் திரும்ப முடிந்தது.

ஒற்றையடிப் பாதையின் இருமருங்கிலும் புல்லும், நெருஞ்சியும், செழிப்பாகப் படர்ந்து பூத்திருந்தன. நான்கைந்து கொக்குகளும், நொன்னை மடையான்களும் தலைக்கு மேல் பறந்தன. பின்னர் நத்தைக் கொத்தி நாரைகள்... தொடர்ந்து கும்பலாய்க் கிளுவைகள்......

'இந்தப் பறவைகளுக்கு, எப்படித்தான் திக்குத்திசை தெரியுமோ...?' — வருடம் தவறாமல், பல்வேறு நாடுகளிலிருந்து பருவத்தை அனுபவிக்க வரும் புள்ளினங்களைப் பார்த்து மனம் வியந்தது.

இன்னும் ஏரி நிறையவில்லை; மழை போதாது. 'புரட்டாசி ஐப்பசியில் வானம் கண் திறக்கலாம். கார்த்திகை மார்கழியில் — இந்த வேடந்தாங்கல் சரணாலயம் பிரமாதமாயிருக்காதா?'

குறுக்கு வழியில் இறங்கி, சமவெளியைக் கடந்து, வயல் வரப்பில் நடக்கையில் மிதிபட்ட நிலத்துளசி இதமான மணம் பரப்பிற்று.

பண்ணைக்குள் நுழைகிற போது, பரசு எதிர்ப்பட்டான்...

இவர் தம் கண்ணைக் கருதுகிற பண்ணைக்கு இமையாக இருப்பவன்: வாழை வாடாமல், கரும்பு வதங்காமல், பயிரினம் துவளாமல் இருக்கிற இரண்டு கிணறுகளைக் கொண்டே எப்போதும் ஒரு மாரிக்காலச் செழிப்பைத் தக்க வைப்பவன்!

"என்ன பரசு, பொன்னியிலே இலைப் புள்ளி நோய் தெரியுதே...!" என்று இவர் தொடங்கும்போதே, "மருந்தடிக்கிற அந்தோணிராசு இன்னைக்கு வந்துடுவாருங்க..." என்பான்.

எங்காவது கொஞ்சம் தயங்கி நின்றால், வேதகிரி என்ன கேட்பார் என்பது இவனுக்கு அத்துபடி. "மல்லாட்டையில் சிவப்புக் கம்பளிப் பூச்சிங்க... நான் நேத்தே கவனிச்சிட்டேன்...!" என்றும், "கரும்பிலே இடைக்கணுப் புழு வந்துடுதேன்னுதானே பார்க்கிறீங்க...?" என்றும் இவன் அவரை முற்றாக உணர்ந்து கேட்கையில், 'நீங்க கவலைப்படாதீங்க... நான் பார்த்துக்கறேன்'

இனியவன்

என்கிற பதிலும் உறைந்திருக்கும்.

பரகவைப் பார்த்தார்; ஏனோ பரகுவின் முகம் மாறியிருந்தது. ஏதோ ஓர் இம்சை இதயத்தில் இருக்கிறது என்பதைக் கண்கள் காட்டின!

மெதுவாக நடந்து, 'எருது சிரிச்சான் மூலே'க்குப் போனார். வடக்கு வரப்பில் வெள்ளரி படர்ந்திருந்தது.

''என்னப்பா பரகு, திடீர்னு ரெண்டு மூணு பழுத்துடுச்சி போலிருக்குதே? நேத்துப் பார்த்தா, காயாவே இருந்துது?''

''அடாடா! பழுத்து, வெடிச்சே போச்சே...! சாயங்காலமே பறிச்சிடணும்னு நெனச்சேன். இது ஒரு ரிஷிப்பிண்டம்னு தெரிஞ்சும் கோட்டை விட்டுட்டேன்...'' என்றவாறு பரகு விரைகையில், பண்ணை வீட்டிலிருந்து பெரியநம்பி அங்கே வந்தான். பரகுவின் மைத்துனன்; சென்னையில் அரசுப் பணியில் இருப்பவன்.

''எப்போடாப்பா வந்தே? சௌக்கியமா?''

''நேத்துச் சாயங்காலங்க; நல்லா இருக்கேங்க. நீங்க சௌக்கியங்களா?''

''இந்தப் பண்ணையும், உங்க மாமனும் இருக்கிற வரை எனக்கென்னப்பா குறைச்சல்?'' என்று பெருமிதமாகச் சொன்னார் வேதகிரி.

ஒரு வெள்ளரிப் பழத்தைப் பறித்து முடித்திருந்த பரகு, பரபரப்புடன் நிமிர்ந்தான்; பெரியநம்பியின் பார்வையில் இரக்கம் நிரம்பியது.

''என்னப்பா, என்னவோ மாதிரி ஆயிட்டே? பரகு, உனக்கு என்ன ஆச்சு? யோசிச்சுப் பார்த்தால், ஆரம்பத்திலிருந்தே நீ சரியா இல்லேன்னு தோணுதே...?''

இவன் பதில் சொல்லவில்லை.

பெரியநம்பி பேசினான்: ''நேத்து மத்தியானம், நான் வந்ததிலிருந்தே இவர் இப்படித்தாங்க ஆயிட்டாரு...''

''ஏன் பரகு? என்ன சமாசாரம்?'' வேதகிரி படபடத்தார்.

''அது வந்துங்க... நான் நம்ம சின்னவரைப் பார்த்தேன். அடையாறில் எங்க ஆபீசர் பங்களாவுக்குப் பக்கத்துப் பங்களாவை விலை பேசிக்கிட்டிருக்காரு. அட்டகாசமான மாடலுங்க. ஒரு சினிமாக்காரி கட்டினதாம். நாலரை கிரவுண்டு பங்களாவிலே ஒரு துளி மண்ணெடுக்க முடியாது! காம்பவுண்டுக்கும் பங்களாவுக்கும் நடுவே சிமெண்ட் பூசி, நூத்துக்கணக்கான தொட்டிகள்லே நூதனமான செடி கொடியெல்லாம் நட்டு... தேவலோக மாளிகை மாதிரி இருக்குதுங்க! சின்னம்மாவுக்கு ரொம்பப் பிடிச்சுப் போனதாலே, எப்படியும் அந்தப் பங்களாவை முடிச்சுடறதுன்னு தீவிரமா இருக்காரு! அதுக்கோசரம், பண்ணையை விக்கவும் ஆள் பிடிச்சிட்டாராம்! அநேகமா, இன்னைக்கோ நாளைக்கோ 'பார்ட்டி'யோட இங்கே வரலாம்...! இந்தச் சமாசாரத்தைக் கேட்டதிலிருந்து இவரு பிரமை பிடிச்சிக் கிடக்கிறாரு...'' என்று தயங்கித் தயங்கிச் சொன்னான் பெரியநம்பி.

திடீரென்று ஒரு முரட்டுக்காளை முட்டிப் புரட்டித் தூக்கி எறிந்தாற் போல் நிலைகுலைந்தார் வேதகிரி.

நெடுநேரமாகியும் பண்ணையைவிட்டுச் செல்ல மனம் வரவில்லை. இவருக்குப் பிடித்தமான ஈசான்யப் பகுதி மண்மேடையில், மரமல்லி நிழலில் சோர்ந்து கிடந்தார். மனத்துள் கிலி நிறைந்து... உடம்பெல்லாம் வேதனை பரவியது.

பரகுவும், பெரியநம்பியும் எவ்வளவு சொல்லியும் அந்த இடத்தை விட்டு நகர மறுத்து விட்டார்!

''வீட்டுக்குப் போய்ச் சாப்பாடு கொண்டாறேங்க...



# அவளுக்கும் கவனிப்புத் தேவை

காலை ஆகாரம் தயாரித்தல், என் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்ப தயார் செய்தல், பகலுணவு தயாரித்தல், கடைக்குப் போவது, வீட்டையும் எனது குடும்பத்தையும் பார்த்துக்கொள்வது.

எனக்கு நாள் முழுதும் ஓயாத வேலை. அதனால்தான் எனக்கு ஹார்லிக்ஸ் தேவை. ஹார்லிக்ஸின் ஊட்டச்சத்து எனக்கு நாள் முழுதும் சக்தியையும் பலத்தையும் அளிக்கிறது. என் குடும்பத்துடன் மதிப்புமிக்க மாலை நேரங்களை அனுபவிக்கப் போதிய புத்துணர்வுடன் நான் இருக்கிறேன்...



ஒரு குடும்பத் தலைவியின் வலுவூட்டும் பானம்.

மால்டெட் பார்லி, முழு ஆடைப்பால் மற்றும் பொன்னிற கோதுமை கொண்ட ஹார்லிக்ஸ் ஒரு சுவையான, சத்தான பானம். ஊட்டச் சத்திற்கு மூலாதாரமான ஒரு லட்சிய பானமென நம்பிக்கையைப் பெற்றது. எனவே கடந்த 100 வருடங்களாக கோடிக்கணக்கான குடும்பங்கள் உலகமெங்கும் ஹார்லிக்ஸின் மேல் நம்பிக்கை வைத்து வருகிறார்கள் என்பதில் ஆச்சரியமில்லை.




சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

# ஜோக் எழுதுங்கள்

## பரிசு ரூ 200



'கடி,' 'அறுவை,' 'ரம்பம்,' 'பிளேடு' என்று பலவிதமாகவும் அழைக்கப்படும் ஜோக்குகள் புதுக்கவிதை போல ஒரு தனிப் பாணியாகவும் ரொம்பப் பிரபலமாகவும் ஆகிவிட்டன. எனவே, இந்த வாரம் ஒரு 'கடி ஜோக்' போட்டி! கீழே வெற்றிடத்தில் ஒரிஜினலாக ஒரு கடி ஜோக் எழுதி, இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்திரித்து விலாசத்தைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். உறையின் மேல் ''கடி ஜோக்'' என்று குறிப்பிடுதல் அவசியம். பிரசுரமாகும் ஜோக்குகளுக்குப் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும்.

**முடிவு தேதி: 7.10.87**

என் பெயர்: ..........................

விலாசம்: ..........................

..........................

''எளநீராவது வெட்டித் தரட்டுங்களா...?''

''மோராவது குடிங்க ஐயா...''

''பச்சைத் தண்ணியாவது...''

வேதகிரி எதற்குமே இசையவில்லை என்பதுடன், இல்லத்திற்குப் போகவும் மறுத்துவிட்டார்!

வெயில் சாரையாக ஏறிக் கொண்டிருந்தது.

பண்ணைக்கு அரணாயிருக்கும் மரங்களையெல்லாம் வெறித்தார்... ஓ... எவ்வளவு காலக் கண்காணிப்பில் உருவானவை! இதோ கரும்பும், வாழையும், இள நடவும் சிரிக்கின்ற பூமியின் பூர்வ கதை புகழேந்திக்கும் தெரியுமே! கள்ளியும், கற்றாழையும், சப்பாத்தியும், ஈச்சையுமாயிருந்த காட்டை அழித்து மேட்டைத் திருத்தி — மேம்படுத்த எப்படியெல்லாம் பாடுபட வேண்டியிருந்தது! அதோ புழுதியாக்கப்பட்டிருக்கும் கழனியில் மலைமலையாக அல்லவா பாறைகள் எழுந்தன!

முள் தைக்க, கல்லடிக்க, பாம்பும் தேளும் தீண்ட இரவும் பகலும் அலைந்து, வெயிலிலும் மழையிலும் காற்றிலும் அலைந்து...

''மாமா...''

''......''

''மாமா...''

இவர் உணர்வு பெற்றார்; பக்கத்து வீட்டுச் சிவமதி கைநிறைய ஏதேதோ செடிகளும், மரக்கன்றுகளுமாய் நின்றான். பட்டம் பெற்றும், இயல்பாய்க் கிடைத்த வேலையை ஏற்காமல், 'விவசாயம் என் குறிக்கோள்' என்று பிறந்த மண்ணுக்குத் திரும்பியிருப்பவன்.

இவனைப் பார்க்கிற போது மட்டுமல்லாமல், நினைக்கிற போதெல்லாமும் வேதகிரியின் நெஞ்சில் மகிழ்ச்சி ஊற்றெடுக்கும்.

சிவமதியும், ''என்னைப் பொறுத்தவரை, உங்க பண்ணைதான் மாமா கோயில்!'' என்று மனமாரப் பாராட்டுவான்.

''மாமா! உங்க ராசியான கையால, இதையெல்லாம் எங்க பண்ணையிலே நட்டு ஆசீர்வாதம் பண்ணுங்க...''

''இவனில்லையா பிள்ளை!' என அந்த விரக்தியான வேளையிலும் உவகை பூத்தது. ''புகழேந்தியும் இருக்கிறானே...' என்று பெருமூச்சு விட்டார்.

ஒரே மகன் என்பதால், எவ்வளவு அன்பாக வளர்த்தார்! எத்தனை கனவுகளுடன் படிக்க வைத்தார்!

புகழேந்திக்கு விவசாயத்தில் விருப்பமில்லை.' என்பது தெரியவும், இவர் நெஞ்சில் ஓர் அடி விழுந்தது! கிராமங்களை அறவே வெறுக்கிற ஒருத்தியை யாருடைய அனுமதியுமில்லாமல் மணந்து கொண்டதால் இதயத்தில் இடியே இறங்கிற்று! இந்த நிலையில், தம்முடைய பரம்பரைக்காக, சூர்ய சந்திராதிகள் உள்ளவரை அவர்கள் அனுபவிப்பதற்காக — அரும்பாடு பட்டு அங்குலம் அங்குலமாகச் சீர்திருத்திக் கண்

ணுக்கிய சொத்தும் பறி போகப் போகிறதா?''

''முடியாது! எதை இழந்தாலும், என்னால் இதை இழக்கவே முடியாது! முடியவே முடியாது!''

''அப்பாவோடு சேர்ந்து, நீயும் அடம் பிடிக்கிறியே அம்மா!'' என்று எரிச்சலோடு கத்தினான் புகழேந்தி.

''அவருக்கு மகனைவிடவும் மண்ணு தான் பிரதானம்னு தெரியுது!'' என்று குத்தலாகச் சொன்னாள் திலகா.

''நீங்க ஏன் இங்கே தனியா இருக்கணும்?''

''இவருக்கானா லீவே கெடைக்க மாட்டேன்னுது...''

''உங்களுக்காகத்தானே மாசம் ஒரு தடவையாவது நான் இங்கே வர வேண்டியிருக்குது?''

''அங்கே வந்துட்டா, நகத்தில் மண் படாமெ சுகமாயிருக்கலாம்...!''

மகனையும் மருமகளையும் மாறி மாறிப் பார்த்த வேதகிரி, விரக்தியாகச் சிரித்தார்: ''பெரியநம்பி சொன்னாரே! நீங்க பார்த்திருக்கிற பங்களாவிலே துளி மண்ணெடுக்க முடியாதாமே?''

''ஆமாமாம்... காம்பவுண்டைச் சுத்தி சிமெண்ட் மெழுகி...'' என்று திலகா பெருமையுடன் பேசத் தொடங்கவும், ''போதும்...'' என்று இரைந்தார் பெரியவர். ''துளி மண்ணெடுக்க முடியாதாம், மண்ணு! அதென்ன, வீடா, நாமெல்லாம் அடங்கப் போற ஜீவ சமாதியா?'' என உடல் நடுங்க மேலும் கூச்சலிட்டார்.

''அப்பா...''

''இப்படி அபத்தமாயெல்லாம் பேசாதிங்க...''

''மூடுடா வாயை! அபத்தமாய்ப் பேசறது நீங்களா, நானா? அனாவசியப் பேச்செதுக்கு? அரும்பாடுபட்டு உருவாக்கிய பண்ணையை என்னால இழக்க முடியாது! என்னோட ஆயிரம் கனவையும் பொசுக்கிட்டியே, போதாதா? எல்லாத்துக்கும் சம்மதிச்சேன்! உன் சந்தோஷம்தான் பெரிசுன்னு நெனச்சேன்... ஆனா... ஆனா...'' என்றவர், தடுமாறினார். குரல் நெகிழ, ''புகழேந்தீ!... கடைசிக் காலத்திலே என் நிம்மதியை அழிச்சிடாதேப்பா!'' என்று கலங்கினார்.

''அப்போ, திலகா சொல்ற மாதிரி உங்களுக்கு மகனைவிட மண்தான் முக்கியமா?'' என்று எல்லையில்லாமல் ஆத்திரப்பட்டான் புகழேந்தி.

வேதகிரியும் பொறுமை மீறி, ''ஆமாம்... ஆமாம்... ஆமாம்...'' என்று அண்டை அயலார் ஓடி வருமளவுக்கு முழங்கினார்.

நிலைதடுமாறிய புகழேந்தி, சமாளித்துக் கொண்டு, ''அம்மா! அப்பாகிட்டே சொல்லிடு. சரியா ஒரு வாரம் டைம் தர்றேன். பிள்ளையா, பூமியான்னு யோசிச்சி, ஒரு முடிவுக்கு வாங்க!'' என்று படபடத்தான்.

''ஒரு வாரத்திலே அந்தப் பங்களா கை மாறிட்டா என்னங்க செய்யறது?'' என்று பயந்த திலகா, இரகசியமாக, ''இவரு இப்படியே அடம் பிடிக்கிறார்ன்னு வெச்சுக்குங்க...'' என்று சந்தேகம் கிளப்பினாள்.

உடனே புகழேந்தி, ''ஒரு வாரம்னா, சரியா ஒரு வாரம்தான்! அப்பா மனசு மாறலேன்னா, நடக்கிற கதையே வேற தான்!'' என்று மிரட்டினான்.

''என்ன செய்வானாம் காமாட்சி, உன் பிள்ளை?'' என இளக்காரமாய்க் கேட்டார் வேதகிரி.

''அதை இப்போது சொல்ல முடியாது!'' என்றவாறு, எப்போதோ படியிறங்கி விட்டிருந்த திலகாவைத் தொடர்ந்தான் புகழேந்தி.

அவர்களை ஓடித் தடுத்துத் தோற்ற காமாட்சி, கணவரிடம் திரும்பி வந்து, ''எப்படியும் சொத்தின் பாத்தியதை அவனுக்குத்தானேங்க? அது நெலமாயிருந்தா என்ன, வீடாயிருந்தா என்ன?'' கண்ணீர் விட்டாள்.

புகழேந்தியின் பேச்சை விட, இவளுடைய சொற்கள் வேதகிரியின் நெஞ்சை அதிகம் தாக்கின. ''காமாட்சி! கடைசியிலே, நீயும் என்னை ஒதுக்கிட்டியா?''

''அதுக்கில்லேங்க... நமக்கு இருக்கிற ஆதாரமே புகழேந்திதானே? கேவலம், மண்ணுக்காக...''

''காமாட்சீ...!'' என்று கத்தினார் வேதகிரி. ''நீயோ, நானோ சாஸ்வதமில்லே. ஆனா, மண்ணு நிரந்தரமானது. பல தலைமுறைகளைப் பார்த்தது; நம்ம பரம்பரைக்குக் கௌரவம் தரக் கூடியது. அதைப் போய்க் கேவலமா நெனைக்கிறவங்களும், சொல்றவங்களும்தான் கேவலமானவங்க!''

நாளாக ஆக, வீட்டில் ஓர் இறுக்கம் நிலவியது. வேதகிரி பெரும்பாலும் பண்ணையிலேயே வளைய வந்தார். கரும்பு, வாழை, நெல் நடவுகளை வெறித்தார்; வானளாவிய மரங்களைப் பார்த்துப் பெருமூச்சு விட்டார்; புழுதிபறக்க நடந்தார்; சேற்றை அளைந்தார்; அவ்வப்போது கிணற்றில் மூழ்கினார்; துளசியைப் பறித்து மென்றார்.

சூரியன் அவரைச் சுடவில்லை! நிலாவும், நட்சத்திரங்களும் குளிர்விக்கவில்லை!

புகழேந்தி சொன்ன தவணை முடிகையில், வேதகிரி பண்ணை மண்ணில் விழுந்து புரண்டு துடித்துக் கொண்டிருந்தார்!

பரசு பதறிப் போய் அவரை மடியில் கிடத்திக் கொண்டு கதறினான்...

''புகழேந்திக்கு விவரமா எழுதி வச்சிருக்கேன்... பரசு... சுடுகாட்டிலே, துளி சாம்பலும் விடாதே! அவ்வளவையும் அள்ளியாந்து, இந்தப் பண்ணை முழுக்கத் தெளிச்சி — என்னை மண்ணோடு மண்ணாக்கு! நான்... நான்... இந்த மண்ணோடு மண்ணாகணும்! மண்ணாகணும்...!'' என்று மூச்சுத் திணறப் பேசிய வேதகிரி, முடிந்து போய் நிலத்தில் சரிந்தார்.

## கர்ப்பப்பை புற்று நோய் இப்பொழுது தவிர்க்கக் கூடியது. எப்படி என்று படித்துப் பாருங்கள்

எல்லா புற்று நோயை விட கர்ப்பப்பை வாயில் வரும் புற்று நோயை முற்றிலும் தவிர்க்க நல்ல சந்தர்ப்பங் களுண்டு. சுலபமாகவும்

துரிதமாகவும் செய்து கொள்ளும் பாப் சோதனை பல ஆண்டுகளுக்கப்பால் தாக்கப்போகும் புற்றுநோயை சிற்சில மாறுதல்களைக் கொண்டு உடனடியாகக் கண்டு பிடிக்கிறது. புற்று நோய் உருவாகும் முன் தகுந்த சிகிச்சையை மேற் கொள்ள நேரம் கிடைக்கிறது.

பாப் சோதனையை சுலபமாக வும் வலியின்றியும் செய்து கொள்ளலாம். பஞ்சை எடுத்து சட்டென்று உள்ளே வழித்தெடுத்தால் போதும். சரியான நேரத்தில் சரிபார்த் துக் கொள்ளாவிட்டால் அபாய அறிகுறிகள் பிற்பாடு தோன்றலாம். உதாரணமாக சீரற்ற இரத்தப்போக்கு, வெள்ளை போதல், மாதவிடாய் காலத்தில் அதிகமான இரத்தப்போக்கு மற்றும் மாதவிடாய் நின்ற பின் இரத்தப் போக்கு.

இப்படி ஒன்றும் நேராமல் நீங்- கள் சுலபமாக நிச்சயப் படுத்திக் கொள்ளலாம். ஆண்டுக் கொரு முறை யாவது பாப் சோதனையை செய்து கொள்ளுங்கள். மகளிர் நோய் சிகிச்சை பற்றிக் கற்றறிந்த தகுந்த வைத்தியரை அணுகுங்கள் அல்லது இந்தியன் கான்ஸர் ஸொஸைட்டிக்கான புற்று நோய் கண்டுபிடிக்கும் ஸ்தலத்திற்குச் செல்லுங்கள்.

### இதோ, கான்ஸர் புற்று நோய் இன்ஷூரன்ஸ்!

இந்தியன் கான்ஸர் ஸொஸைட்டி புற்று நோய் கண்டுபிடிப்புக்கும் அதற் கான சிகிச்சைகளுக்கும் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி வழங்குகிறது. இந்தியாவில் இத்தகைய காரணத்திற்கு எடுக்கக் கூடிய ஒரே பாலிஸி இது. ஒரு சிறு தொகை யளித்து ரூ. 40,000 வரை நீங்களும் உங்கள் ஆயுள் துணையும் பெறலாம். மற்ற விவரங்களுக்கு எங்களிடம் தொலைபேசியில் தொடர்பு கொள்ளுங்கள் அல்லது கீழ்க்காணும் விலாசத்திற்கு எழுதுங்கள்.

**ஆலோசனைக்கு அணுகவேண்டிய இதர நிலையங்கள் :**

- பாலிகா மெடிகல் ஸெண்டர், 48, பாபர் ரோடு, பெங்காலி மார்க்கெட், நியூ டெல்லி 1100 01. போன் : 389363
- 15/A, சரத் போஸ் ரோடு, கல்கத்தா 700 020. போன் : 433812
- 127, அங்கப்ப தெரு, சென்னை 600 001. போன் : 39444



**இந்தியன் கான்ஸர் ஸொஸைட்டி**

தேசியத் தலைமையகம் : லேடி ரத்தன் டாட்டா மெடிகல் & ரிசர்ச் ஸெண்டர், எம். கார்வே ரோடு, கூபரேஜ், பம்பாய் 400 021. போன் : 2021417

முன்னமே நோயறிவீர்
முன்னமே குணம்பெறுவீர்.

daCunha/ICS/13/87 TAM R

# பொன்னியின் செல்வன்



## அத்தியாயம் 17

## மாண்டவர் மீள்வதுண்டோ?



இதுவரைக்கும் சுந்தர சோழர் வேறு யாரோ ஒரு மூன்றாம் மனிதனைப் பற்றிச் சொல்வது போலச் சொல்லிக் கொண்டு வந்தார். இப்போது தம்முடைய வாழ்க்கையில் நடந்த வரலாறாகவே சொல்லத் தொடங்கினார்:—

"என் அருமை மகளே! சாதாரணமாக ஒரு தகப்பன் தன் மகளிடம் சொல்லக் கூடாத விஷயத்தை இன்று நான் உனக்குச் சொல்கிறேன். இதுவரை யாரிடமும் என் மனத்தைத் திறந்து சொல்லாத செய்தியை உன்னிடம் சொல்கிறேன். இந்த உலகத்திலேயே என் நண்பன் அநிருத்தன் ஒருவனுக்குத்தான் இது தெரியும்; அவனுக்கும் முழுதும் தெரியாது. இப்போது என் மனத்தில் நடக்கும் போராட்டம் அவனுக்குத் தெரியாது. ஆனால் உன்னிடம் எல்லாவற்றையும் சொல்லப் போகிறேன். நம்முடைய குடும்பத்தில் யாராவது ஒருவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். உன் தாயாரிடம் சொல்ல எனக்கு நா எழாது. உன் தமையனிடமும் தம்பியிடமும் சொல்ல முடியாது. உன்னிடந்தான் சொல்ல வேண்டுமென்று சில காலமாகவே எண்ணியிருந்தேன். அதற்குச் சந்தர்ப்பம் இன்றைக்கு வாய்த்தது. அதற்கு வேண்டிய தைரியமும் இன்றைக்குத்தான் வந்தது. நீ என் நிலையைக் கண்டு சிரிக்க மாட்டாய்; என் மனத்திலுள்ள புண்ணை ஆற்றுவதற்கு முயல்வாய்; என்னுடைய விருப்பம் நிறைவேறவும் உதவி செய்வாய்! — இந்த நம்பிக்கையுடன் உன்னிடம் சொல்கிறேன்......

"அந்தத் தீவிலிருந்து மரக்கலத்தில் ஏறிப் புறப்பட்டேன். கோடிக்கரை சேர்ந்தேன். என் பாட்டனார் பராந்தக சக்கரவர்த்தி இந்தத் தஞ்சை அரண்மனையில் அப்போது தங்கி இருக்கிறார் என்று அறிந்து நேராக இங்கே வந்தேன்.

"நான் தஞ்சை வந்து சேர்ந்தபோது பராந்தக சக்கரவர்த்தி மரணத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார். அவர் உள்ளம் நொந்து போயிருந்தது. நாற்பது ஆண்டு காலத்தில் அவர் நிர்மாணித்த மகாராஜ்யம் சின்னா

அமரர் கல்கி

பின்னம் அடைந்து கொண்டிருந்தது. அவருக்குப் பிறகு பட்டத்தை அடைய வேண்டியவரான இராஜாதித்தர் தக்கோலப் போரில் மாண்டார். அதே போர்க்களத்தில் படுகாயம் அடைந்த என் தந்தை அரிஞ்சயர் பிழைப்பாரோ, மாட்டாரோ என்ற நிலையில் இருந்தார். கன்னரதேவனுடைய படைகள் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றி முன்னேறிக் கொண்டு வந்தன. தெற்கே பாண்டியர்கள் தலையெடுத்து வந்தார்கள். இலங்கையில் சோழ சைன்யம் தோல்வியுற்றுத் திரும்பிவிட்டது. பலபோர்க்களங்களிலும் சோழ நாட்டு வீராதி வீரர்கள் பலர் உயிர் துறந்து விட்டார்கள். இந்தச் செய்திகள் எல்லாம் ஒரு மிக்க வந்து முதிய பிராயத்துப் பராந்தக சக்கரவர்த்தியின் உள்ளத்தைப் புண்படுத்தித் துயரக் கடலில் ஆழ்த்தியிருந்தன. இந்த நிலையில் என்னைக் கண்டதும் அவருடைய முகம் மலர்ச்சி அடைந்தது. என் பாட்டனருக்கு நான் குழந்தையாயிருந்த நாளிலிருந்து என் பேரில் மிக்க பிரியம். என்னை எங்கேயும் அனுப்பாமல் அரண்மனையில் தம்முடனேயே வெகுகாலம் வைத்திருந்தார். பிடிவாதம் பிடித்து அவரிடம் விடைபெற்றுக் கொண்டு நான் ஈழ நாட்டுக்குப் போனேன். அங்கிருந்து திரும்பி வந்தவர்களிலே நான் இல்லை என்று அறிந்ததும் என் பாட்டனரின் மனம் உடைந்து போயிருந்தது. நான் இறந்து விட்டதாகவும் தெரியவில்லையாதலால் என்னைத் தேடி வரக் கூட்டங் கூட்டமாக ஆட்களை அனுப்பிக் கொண்டிருந்தார்.

"கடைசியில் ஒரு கூட்டம் என்னைக் கண்டுபிடித்தது. நான் தஞ்சை வந்து சேர்ந்ததும், புண்பட்ட அவர் மனத்துக்குச் சிறிது சாந்தி ஏற்பட்டது. அவருடைய அந்திய காலத்தில் வீழ்ச்சியடைந்து வந்த சோழ சாம்ராஜ்யம் மறுபடியும் என்னால் மேன்மையடையும் என்பதாக எப்படியோ அவர் மனத்தில் ஒரு நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. அந்த நம்பிக்கையைச் சோதிடர்கள் வளரச் செய்திருந்தார்கள். அதற்குத் தகுந்தாற் போல், அவருக்குப் புதல்வர்கள் நாலு பேர் இருந்தும், அவருடைய அந்திய காலத்தில் பேரன் நான் ஒருவனே இருந்தேன். சக்கரவர்த்தி இறக்கும் தறுவாயில் என்னை அருகே அழைத்து உச்சி முகந்து கண்ணீர் பெருக்கினர். 'அப்பனே! எனக்குப் பிறகு உன் பெரியப்பன் கண்டராதித்தன் சிம்மாசனம் ஏறுவான். அவனுக்குப் பிறகு இந்தச் சோழ ராஜ்யம் உன்னை அடையும். உன்னுடைய காலத்திலேதான் மறுபடி இந்தச் சோழ குலம் மேன்மையடையப் போகிறது!' என்று பல முறை அவர் கூறினர். சோழ நாட்டின் மேன்மையை நிலைநாட்டுவதே என் வாழ்க்கையின் இலட்சியமாயிருக்க வேண்டுமென்று சொல்லி, அவ்வாறு என்னிடம் வாக்குறுதியும் பெற்றுக் கொண்டார்.........

"என் பாட்டனர் என்னிடம் எவ்வளவு பிரியம் வைத்திருந்தாரோ, அவ்வளவு நான் அவரிடம் பக்தி வைத்திருந்தேன். ஆதலின் அவருடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு நடப்பதென்று உறுதி கொண்டேன். ஆனாலும் என் உள்ளத்திலே அமைதி இல்லை. கடல் சூழ்ந்த தீவில் கரடிக்கு இரையாகாமல் என்னைக் காப்பாற்றிய கன்னியர் குலமகளின் கதி என்ன? சோழ நாட்டுச் சிம்மாசனத்தில் கீழ்க் குலத்தில் பிறந்த ஊமைப் பெண் ஒருத்தி ராணியாக வீற்றிருக்க முடியுமா? அரண்மனை வாழ்வு அவளுக்குத்தான் சரிப்பட்டு வருமா? நாட்டார் நகரத்தார் என்னைப் பார்த்துச் சிரிக்க மாட்டார்களா?..... இந்த எண்ணங்கள் அடிக்கடி தோன்றி என் மனத்தைச் சஞ்சலப்படுத்தின. இது மட்டுமன்று. என் பெரிய தகப்பனர் கண்டராதித்தர் சில காலத்திற்கு முன்புதான் இரண்டாவது கலியாணம் செய்து கொண்டிருந்தார். அவரை மணந்த பாக்கியசாலி மழவரையர் குலமகள் என்பதை நீ அறிவாய். முதல் மனைவிக்குக் குழந்தை இல்லையென்றால், இரண்டாவது மனைவிக்கும் குழந்தை பிறவாது என்பது என்ன நிச்சயம்? பெரியப்பாவுக்கு

ஆண் குழந்தை பிறந்தால், இராஜ்யம் எனக்கு எப்படி வரும்?' — இதைப் பற்றி ராஜ்யத்தில் சிலர் அப்போதே பேசிக் கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. ஆனால் அத்தகைய சந்தேகம் யாருக்கும் உண்டாகக் கூடாது என்று மகாத்மாவாகிய என் பெரிய தகப்பனார் விரும்பினார் போலும். பராந்தக சக்கரவர்த்தி காலமான பிறகு கண்டராதித்தருக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் நடந்தது. அதே சமயத்தில் எனக்கும் யுவராஜ்ய பட்டாபிஷேகம் நடக்க வேண்டும் என்று என் பெரியப்பா — புதிய சக்கரவர்த்தி — ஏற்பாடு செய்துவிட்டார்...

"என் பிரிய மகளே! இன்றைக்கு உன் தம்பி அருள்மொழியின் பேரில் இந்த நாட்டு மக்கள் எப்படிப் பிரியமாயிருக்கிறார்களோ, அப்படி அந்த நாளில் என்பேரில் அபிமானமாயிருந்தார்கள். அரண்மனைக்குள்ளே பட்டாபிஷேகம்நடந்துகொண்டிருந்த போது வெளியிலே ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஆவலுடன் காத்திருந்தார்கள். புதிதாக முடிசூடிய சக்கரவர்த்தியும் யுவராஜாவும் சேர்ந்தாற்போல் ஜனங்களுக்குக் காட்சி தர வேண்டும் என்று அனைவரும் விரும்பினார்கள். அவ்விதமே பெரியப்பாவும் நானும் இந்த அரண்மனை மேன் மாடத்தின் முன்றிலுக்கு வந்து நின்றோம். கீழே ஒரே ஜன சமுத்திரமாக இருந்தது. அவ்வளவு பேருடைய முகங்களும் மலர்ந்து விளங்கின. எங்களைக் கண்டதும் அவ்வளவு பேரும் குதூகலமடைந்து ஆரவாரித்தார்கள். நாம் இளவரசுப் பட்டம் சூட்டிக் கொண்டது பற்றி இவ்வளவு ஆயிரமாயிரம் மக்கள் குதூகலம் அடைந்திருக்கிறார்களே. அப்படியிருக்க, எங்கேயோ ஒரு கண்காணாத்தீவில் காட்டின் மத்தியில் வாழும் ஊமைப் பெண்ணைப் பற்றி நாம் கவலைப்படுவது என்ன நியாயம்? இவ்வளவு பேருடைய மகிழ்ச்சி முக்கியமானதா? ஒரே ஓர் ஊமைப் பெண்ணின் வாழ்க்கை முக்கியமானதா?......

"இவ்வாறு எண்ணிக் கொண்டே எங்களை அண்ணாந்து பார்த்தபடி நின்ற மலர்ந்த முகங்களை ஒவ்வொன்றாகக் கவனித்துக் கொண்டு வந்தேன்.




கண்டராதித்தர்

அந்தஜனங்களிலே ஆண்களும்பெண்களும் முதியவர்களும் இளைஞர்களும் சிறுவர் சிறுமிகளும் நின்றார்கள். எல்லோரும் ஒரே களிப்புடன் காணப்பட்டார்கள். ஆனால் திடீரென்று ஒரு முகம், ஒரு பெண்ணின் முகம், சோகம் ததும்பிய முகம், கண்ணீர் நிறைந்த கண்களினால் என்னைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்த முகம், — தெரிந்தது. அந்தனை கூட்டத்துக்கு நடுவில் எப்படி அந்த ஒரு முகம் என் கண்ணையும்கவனத்தையும்கவர்ந்ததென்பதை நான் அறியேன். பிறகு, அங்கிருந்து என் கண்களும் நகரவில்லை; கவனமும் பெயரவில்லை. அந்த முகம் வரவரப் பெரிதாகி வந்தது; என் அருகே அருகே வருவது போலிருந்தது. கடைசியில் அந்தப் பெரிய ஜனத்திரள் முழுதும் மறைந்து, என் அருகில் நின்றவர்கள் எல்லாரும் மறைந்து, அரண்மனை மறைந்து, ஆசாரவாசல் மறைந்து, தஞ்சை

நகரின் கோட்டை கொத்தளம் மறைந்து, வானும் மண்ணும் மறைந்து, அந்த ஒரு முகம் மட்டும் தேவி பரமேசுவரியின் விசுவரூபத்தைப் போல் என் கண் முன்னால் தோன்றியது. என் தலை சுழன்றது; கால்கள் பலமிழந்தன; நினைவு தவறியது......

"அப்படியே நான் மயங்கி விழுந்து விட்டதாகவும் பக்கத்திலிருந்தவர்கள் தாங்கிப் பிடித்துக் கொண்டதாகவும் பிற்பாடு அறிந்தேன். பட்டாபிஷேக வைபவச் சடங்குகளில் நான் அதிகம் களைத்துப் போய் விட்டதாக மற்றவர்கள் நினைத்தார்கள். ஜனங்களுக்குக் காட்சி அளித்தது போதும் என்று என்னை அரண்மனைக்குள்ளே அழைத்துச் சென்றார்கள். பிறகு எனக்கு நல்ல நினைவு வந்ததும் என் நண்பன் அநிருத்தனைத் தனியாக அழைத்து நான் கண்ட காட்சியைக் கூறினேன். அந்த ஊமைப் பெண்ணின் அடையாளம் கூறி எப்படியாவது அவளைக் கண்டுபிடித்து அழைத்துவர வேண்டும் என்று கட்டளையிட்டேன். தஞ்சை நகரின் மூலை முடுக்கெல்லாம் தேடியும் அத்தகைய ஊமைப் பெண் யாரும் இல்லையென்று அநிருத்தன் வந்து சொன்னான். என்னுடைய உள்ளத்தின் பிரமையாக இருக்கு மென்றும் கூறினான். நான் அவனைக் கோபித்துக் கொண்டு 'இந்த உதவி கூடச் செய்யாவிட்டால் அப்புறம் நீ என்ன சிநேகிதன்?' என்றேன். தஞ்சைக் கோட்டைக்கு வெளியே கடற்கரையை நோக்கிச் செல்லும் பாதைகளில் ஆள் அனுப்பித் தேடும்படி சொன்னேன். அப்படியே பல வழிகளிலும் ஆட்கள் சென்றார்கள். கடற்கரை வரையில் போய்த் தேடினார்கள். கோடிக்கரைக்குப் போனவர்கள் அங்கேயுள்ள கலங்கரை விளக்கக் காவலன் வீட்டில் ஓர் ஊமைப் பெண் இருப்பதாகக் கண்டு பிடித்தார்கள். அவள் பித்துப் பிடித்தவள் போலத் தோன்றினாளாம். எவ்வளவோ ஜாடை மாடைகளினால் அவளுக்கு விஷயத்தைத் தெரிவிக்க முயன்றது பயன்படவில்லையாம். அவர்களுடன் தஞ்சைக்கு வருவதற்கு அடியோடு மறுத்துவிட்டாளாம். இந்தச் செய்தியை அவர்கள் கொண்டு வந்தவுடனே, இன்னது செய்வதென்று தெரியாமல் மனம் கலங்கினேன். இரண்டு நாட்கள் அந்தக் கலக்கத்திலேயே இருந்தேன். ஆனமட்டும் அவளை மறந்துவிடப் பார்த்தும் இயலவில்லை. இரவும் பகலும் அதே நினைவாயிருந்தது. இரவில் ஒரு கணங் கூடத் தூங்கவும் முடியவில்லை. பிறகு அநிருத்தனையும் அழைத்துக்கொண்டு கோடிக்கரைக்குப் புறப்பட்டேன். குதிரைகளை எவ்வளவு வேகமாகச் செலுத்தலாமோ அவ்வளவு வேகமாகச் செலுத்திக் கொண்டு போனேன். போகும்போது என் மனக்கலக்கம் இன்னும் அதிகமாயிற்று. அந்த ஊமைப் பெண்ணை அங்கே கண்டு பிடித்தால், அப்புறம் அவளை என்ன செய்வது என்று எண்ணியபோது மனம் குழம்பியது. தஞ்சைக்கோ பழையாறைக்கோ அழைத்துப் போய் 'இவள் என் ராணி!' என்று சொல்லுவதா? அவ்வாறு நினைத்த போது என் உள்ளமும் உடலும் குன்றிப் போய் விட்டன.



"என் செல்வக்குமாரி! அந்த நாளில் நான் மேனி அழகில் நிகரற்றவன் என்று வேண்டாத பிரபலம் ஒன்று எனக்கு ஏற்பட்டிருந்தது. அதை ஒரு புகழாகவே நான் நினைக்கவில்லை. ஆயினும் மற்றவர்கள் அதைப் பற்றி ஓயாது பேசினார்கள். என் பாட்டனாரின் பெயராகிய 'பராந்தகன்' என்னும் பெயரை எனக்கு வைத்திருந்தும், அது அடியோடு மறையும்படி செய்து 'சுந்தர சோழன்' என்ற பெயரைப் பிரபலப்படுத்திவிட்டார்கள். அப்படி அனைவராலும் புகழப்பட்ட நான், நாகரிகம் இன்னதென்று தெரியாத ஓர் ஊமைப் பெண்ணை எப்படி அரண்மனைக்கு அழைத்துப் போவேன்? இல்லையென்றால், அவளை என்ன செய்வது?— இப்படிப் பலவாறு எண்ணிக் குழம்பிய மனத்துடன் சோடிக்கரை சேர்ந்தேன். அந்த மகராஜி எனக்குக் கஷ்டம் எதுவும் இல்லாமல் செய்து விட்டாள். அங்கே நான் அறிந்த செய்தி என்னை அப்படியே ஸ்தம்பித்துப் போகும்படி செய்துவிட்டது. நாங்கள் அனுப்பிய ஆட்கள் திரும்பிச் சென்ற மறுநாள் அந்தப் பெண் கலங்கரை விளக்கின் உச்சியில் ஏறினாளாம். அன்று அமாவாசை. காற்று பலமாக அடித்தது. கடல் பொங்கிக் கொந்தளித்து வந்து கலங்கரை விளக்கைச் சூழ்ந்துகொண்டது. அந்தப் பெண் சிறிது நேரம் கொந்தளித்த அலை கடலைப் பார்த்துக் கொண்டே நின்றாளாம். அப்படி அவள் அடிக்கடி நிற்பது வழக்கமாதலால் யாரும் அதைப் பொருட்படுத்தவில்லையாம்! திடீரென்று 'வீல்' என ஒரு சத்தம் அலைகடலின் முழக்கத்தையும் மீறிக் கொண்டு கேட்டதாம். பிறகு, அவளைக் காணோம்! பெண் உருவம் ஒன்று விளக்கின் உச்சியிலிருந்து கடலில் தலைகீழாக விழுந்ததை இரண்டொருவர் பார்த்தார்களாம். படகுகளைக் கொண்டு வந்து ஆன மட்டும் தேடிப் பார்த்தும் பயன்படவில்லை. கொந்தளித்துப் பொங்கிய கடல் அந்தப் பெண்ணை விழுங்கி விட்டது என்றே தீர்மானிக்க வேண்டியிருந்ததாம்......



"இந்தச் செய்தியைக் கேட்டதும் என் நெஞ்சில் ஈட்டியினால் குத்துவது போன்ற வலியும் வேதனையும் உண்டாயின. ஆனால் சற்று நேரத்துக்கெல்லாம் ஒருவித அமைதியும் உண்டாயிற்று. அவளை என்ன செய்வது என்ற கேள்வி இனி இல்லை. அதைப் பற்றி யோசித்து மனத்தைக் குழப்பிக் கொள்ள வேண்டியதுமில்லை!......

"துன்பமும் அமைதியும் கலந்த இந்த விசித்திர வேதனையுடன் தஞ்சைக்குத் திரும்பினேன். இராஜ்ய காரியங்களில் மனத்தைச் செலுத்தினேன். போர்க்களங்களுக்குச் சென்றேன். உன் தாயை மணந்து கொண்டேன். வீரப் புதல்வர்களைப் பெற்றேன். உன்னை என் மகளாக அடையும் பாக்கியத்தையும் பெற்றேன்......

"ஆனாலும், மகளே! செத்துப் போன அந்தப் பாவியை என்னால் அடியோடு மறக்க முடியவில்லை. சிற்சில சமயம் என் கனவிலே அந்தப் பயங்கரக் காட்சி, — நான் கண்ணால் பாராத அந்தக் காட்சி, — தோன்றி

என்னை வருத்திக் கொண்டிருந்தது. கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து ஒரு பெண் உருவம் தலைகீழாகப் பாய்ந்து அலைகடலில் விழும் காட்சி என் கனவிலும் கற்பனையிலும் தோன்றிக் கொண்டிருந்தது. கனவில் அந்தப் பயங்கரக் காட்சியைக் காணும்போதெல்லாம் நான் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருப்பேன். பக்கத்தில் படுத்திருப்பவர்கள், 'என்ன? என்ன?' என்று கேட்பார்கள். உன் தாயார் எத்தனையோ தடவை கேட்டதுண்டு. ஆனால் நான் உண்மையைக் கூறியதில்லை. 'ஒன்றுமில்லை' என்று சில சமயம் சொல்வேன். அல்லது போர்க்கள பயங்கரங்களைக் கற்பனை செய்து கூறுவேன். நாளடைவில் காலதேவனின் கருணையினால் அந்தப் பயங்கரக் காட்சி என் மனத்தை விட்டு அகன்றது; அவளும் என் நினைவிலிருந்து அகன்றாள்; அகன்று விட்டதாகத் தான் சமீபகாலம் வரையில் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் உயிரோடிருப்பவர்களைக் காட்டிலும் செத்துப் போனவர்கள் அதிக கொடுமைக்காரர்கள் என்று தோன்றுகிறது. மகளே! ஊமைச்சியின் ஆவி என்னை விட்டு விடவில்லை. சில காலமாக அது மீண்டும் தோன்றி என்னை வதைக்க ஆரம்பித்திருக்கிறது! என் மகளே! மாண்டவர்கள் மீண்டு வருவார்கள் என்று நீ நம்புகிறாயா.....?"

இராஜாதித்தர்






இவ்விதம் சொல்லி விட்டுச் சுந்தர சோழர் தம் பார்வையை எங்கேயோ தூரத்தில் செலுத்தி வெறித்துப் பார்த்தார். அவர் பார்த்த திக்கில் ஒன்றுமே இல்லைதான்! ஆயினும் அவருடைய உடம்பு நடுங்குவதைக் குந்தவை கண்டாள். எல்லையற்ற இரக்கம் அவர் பேரில் அவளுக்கு உண்டாயிற்று. கண்களில் நீர் ததும்பியது. தந்தையின் மார்பில் தன் முகத்தைப் பதித்துக் கொண்டு கண்ணீர் விட்டாள். அதனால் அவருடைய நடுக்கமும் குறைந்ததாகத் தோன்றியது. பிறகு தந்தையை நிமிர்ந்து நோக்கி, "அப்பா! இந்தப் பயங்கரமான வேதனையைப் பலவருஷ காலம் தங்கள் மனத்திலேயே வைத்துக் கொண்டு கஷ்டப்பட்டிருக்கிறீர்கள். அதனாலேதான் தங்கள் உடம்பும் சீர்குலைந்து விட்டது. இப்போது என்னிடம் சொல்லி விட்டீர்கள் அல்லவா? இனிமேல் தங்கள் உடம்பு சரியாகப் போய்விடும்" என்றாள்.

சுந்தரசோழர் அதைக் கேட்டுச் சிரித்த சிரிப்பின் ஒலியில் வேதனையுடன்கூட அவநம்பிக்கையும் கலந்திருந்ததேன்? அவர் கூறினார்:—

"குந்தவை! நீ நம்பவில்லை. மாண்டவர்கள் மீண்டு வருவார்கள் என்று நீ நம்பவில்லை. ஆனாலும் அதோ அந்தத் தூணுக்குப் பக்கத்தில், குத்து விளக்கின் பின்னால், அந்தப் பாவியின் ஆவி நேற்று நள்ளிரவில் நின்றது. என் கண்ணாலேயே பார்த்தேன். அதை எப்படி நம்பாமலிருக்க முடியும்? நான் கண்டது வெறும் பிரமை என்றால்

Bournvita

# நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி!

அன்னையர், அறிவர்: கேட்பரியின் போர்ன்விடா கோகோ, மால்ட், பால் மற்றும் அசல் சீனியின் ஊட்ட நலன்களைக் கொண்டது. போர்ன்விடா குழந்தைகள் மிக விரும்பும் அத் தனிச் சுவையை பாலின் குணத்துடன் அளிக்கிறது.

தினமும் போர்ன்விடா அளிக்கப்படும் குழந்தைகள் வேலையிலும் விளையாட்டிலும் கூர்மையோடிருக்கிறார்கள். அது. அவர்களுக்கு ஆரோக்கியத்தையும் சுறுசுறுப்பையும் அளிக்கிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் நலன் அளிக்கிறது.

அதன் தனிச் சுவையுடன் இணைந்திட்ட இன்றைய வளர்ச்சி.

கேட்பரியின்
போர்ன்விடா




OBM/9174 TAM

தனது 31-வது ஆண்டு நிறைவில் எல்.ஐ.சி. நாட்டிற்கு நல்கிய வாகுறுதிகளைப் புதுப்பிக்கிறது.



''ஆயுள் காப்பு இந்தியாவின் ஒரு மாபெரும் அரசு நிறுவனமாகிறது. இதன் குறிக்கோள், தனி நபர் சேவையும் தேசப் பணியும் ஆகும். இனி, இலாப இலக்கைவிட, சேவையே இதன் சீரிய குறிக்கோளாகத் திகழும்.''



ஜவஹர்லால் நேரு
ஆகஸ்ட் 24, 1956

உன் தோழியைப் பற்றி என்ன சொல்வாய்? அவள் எதையோ பார்த்துக் கேட்டதனால்தானே நினைவு தப்பி விழுந்தாள்! அவளை அழைத்து வா, குந்தவை! நானே நேரில் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன்!'' என்று சுந்தர சோழர் பரபரப்புடன் கூறினார்.

''அப்பா! வானதி ஒரு பயங்கொள்ளிப் பெண்! கொடும்பாளூர் வீர வேளிர் குலத்தில் இவள் எப்படிப் பிறந்தாளோ, தெரியவில்லை. இருட்டில் தூணைப் பார்த்தாலும், அவள் அலறி அடித்துக்கொண்டு மயக்கமாய் விழுவாள். அவளைக் கேட்பதில் யாதொரு பயனும் இல்லை. அவள் ஏதும் பார்த்திருக்கவும் மாட்டாள்; கேட்டிருக்கவும் மாட்டாள்.''

''அப்படியா சொல்கிறாய்? அவள் போனால் போகட்டும். நான் சொல்ல வேண்டியது மிச்சத்தையும் கேள்! மாண்டவர்கள் மீண்டு வருவார்கள் என்பதில் எனக்கும் வெகுகாலம் நம்பிக்கை இல்லாமல்தானிருந்தது. அப்படிப்பட்ட தோற்றம் என்னுடைய வீண் மனப்பிரமை என்றே நானும் எண்ணியிருந்தேன். காவேரி நதியில் நாம் எல்லாருமாக ஓடத்தில் போய்க் கொண்டிருந்தபோது குழந்தை அருள்மொழி வர்மன் திடீரென்று காணமற் போனது உனக்கு நினைவிருக்கிறதல்லவா? நாம் எல்லோரும் திகைத்தும் தவித்தும் நிற்கையில் ஒரு பெண்ணரசி பொன்னி நதி வெள்ளத்திலிருந்து குழந்தையை எடுத்துத் தூக்கிக் கொடுத்தாள். குழந்தையை மற்றவர்கள் வாங்கிக் கொண்டதும் அவள் மறைந்து விட்டாள். இதைப் பற்றி நாம் எவ்வளவோ தடவை பேசியிருக்கிறோம். நீ மறந்திருக்க முடியாது. நீங்கள் எல்லோரும் காவேரியம்மன் தான் குழந்தையைக் காப்பாற்றியதாக முடிவு கட்டினீர்கள். ஆனால் என் கண்ணுக்கு என்ன தோன்றியது தெரியுமா? அந்த வேலைனூர் குலமகள் — ஊமைச்சிதான் — குழந்தையை எடுத்துக் கொடுத்ததாகத் தோன்றியது. அன்றைய தினமும் நான் நினைவிழந்து விட்டேன் என்பது உனக்கு ஞாபகம் இருக்கிறதா? குழந்தைக்கு நேர்ந்த அபாயத்தை முன்னிட்டு நான் நினைவிழந்தேன் என்று எல்லாரும் எண்ணினார்கள். ஆனால் உண்மை அதுவன்று. இத்தனை நாட்கள் கழித்து உனக்குச் சொல்கிறேன். குழந்தையை எடுத்துக் கொடுத்த பெண்ணுருவம் அவளுடைய ஆவி உருவம் என்று எனக்குத் தோன்றிய படியால்தான் அப்படி மூர்ச்சையடைந்தேன்......

''மகளே! உன் தமையனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டிய தினம் நினைவிருக்கிறதா? அன்று பட்டாபிஷேகம் நடந்த பிறகு ஆதித்த கரிகாலன் அந்தப்புரத்துக்குத் தாய்மார்களிடம் ஆசி பெறுவதற்காக வந்தான் அல்லவா? அவனுக்குப் பின்னால் நான் வந்தேன். அதே ஊமைச்சியின் ஆவி அங்கே பெண்களின் மத்தியில் நின்று கரிகாலனைக் கொடூரமாக உற்றுப் பார்த்ததைக் கண்டேன். மீண்டும் ஒரு தடவை பிரக்ஞை இழந்தேன். பிறகு யோசித்த போது அந்தச் சம்பவத்தைக் குறித்து எனக்குச் சந்தேகம் உண்டாயிற்று. அப்படி அவள் கரிகாலனைக் கொடூரமாகப் பார்க்க வேண்டிய அவசியம் என்ன என்று ஐயுற்றேன். அதுவும் என் சித்தப் பிரமையின் தோற்றமாயிருக்கலாம் என்று எண்ணினேன். ஆனால், மகளே! இந்தத் தடவை தஞ்சைக்கு வந்த பிறகு அந்தச் சந்தேகமெல்லாம் தீர்ந்து விட்டது. ஒரு காலத்தில், — அவள் உயிரோடிருந்த காலத்தில், — அவள் முகத்தைப் பார்த்து அவள் மனத்திலுள்ளதைத் தெரிந்து கொள்வேன்; அவள் உதடு அசைவதைப் பார்த்து அவள் சொல்ல விரும்புவது இன்னதென்று தெரிந்து கொள்வேன். அந்தச் சக்தியை மீண்டும் நான் பெற்றுவிட்டேன். குந்தவை! நாலைந்து முறை நள்ளிரவில் அவள் என் முன்னால் தோன்றி எனக்கு எச்சரிக்கை செய்துவிட்டாள். 'என்னைக் கொன்றாயே! அதை நான் மன்னிக்கிறேன். ஆனால் மீண்டும் பாவம் செய்யாதே! ஒருவனுக்குச் சேரவேண்டிய இராஜ்யத்தை இன்னொருவனுக்குக் கொடுக்காதே!' என்று அவள் சொல்வதைப் புரிந்து கொண்டேன். அவளுக்குப் பேசும் சக்தி வந்து வாயினால் பேசினால் எப்படித் தெரிந்து

கொள்வேனே அவ்வளவு தெளிவாகத் தெரிந்து கொண்டேன். மகளே! அதை நிறைவேற்றி வைக்க எனக்கு நீ உதவி செய்ய வேண்டும். சாபமுள்ள இந்த இராஜ்யம், — இந்தச் சோழ சிம்மாசனம், — என் புதல்வர்களுக்கு வேண்டாம்! இதை மதுராந்தகனுக்குக் கொடுத்து விடலாம்....."



ந்தவை அப்போது குறுக்கிட்டு, "அப்பா! இது என்ன சொல்கிறீர்கள்? நாடு நகரமெல்லாம் ஒப்புக்கொண்டு முடிந்து போன காரியத்தை இப்போது மாற்ற வேண்டிய அவசியம் என்ன? தாங்கள் மாற்றினாலும் உலகம் ஒப்புக் கொள்ளுமா?" என்று கேட்டாள்.

"உலகம் ஒப்புக் கொண்டால் என்ன, ஒப்புக் கொள்ளாவிட்டால் என்ன? தர்மம் இன்னதென்று தெரிந்து செய்ய வேண்டியது என் கடமை. நான் இந்தச் சோழ ராஜ்யத்துக்கு இளவரசனாகவும் பிறகு சக்கரவர்த்தியாகவும் முடி சூட்டிக் கொண்ட போதே என் மனம் நிம்மதியாயில்லை. என் மனச்சாட்சி என்னை உறுத்தியது. மூத்தவரின் மகன் உயிரோடிருக்கும் போது இளையவரின் மகனாகிய நான் பட்டத்துக்கு வந்ததே முறையன்று. அந்தப் பாவத்தின் பலனை இன்று நான் அனுபவிக்கிறேன். என் புதல்வர்களும் அத்தகைய பாவத்துக்கு ஏன் உள்ளாக வேண்டும்? ஆதித்தனுக்கும் இந்த ராஜ்யம் வேண்டாம்; அருள்மொழிக்கும் வேண்டாம். இந்த ராஜ்யத்துடன் வரும் சாபமும் வேண்டாம். நான் உயிரோடிருக்கும்போதே மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டிவிட வேண்டும். அதன் பிறகு ஆதித்தன் காஞ்சியில் கட்டியிருக்கும் பொன் மாளிகையில் சென்று நான் மன நிம்மதியோடு வசிப்பேன்....."

"அப்பா! பெரிய பிராட்டி இதற்குச் சம்மதிக்க வேண்டாமா?"

"மகளே! அதற்காகத்தான் உன் உதவியை நாடுகிறேன். எந்தக் காரணம் சொல்லியாவது என் பெரியம்மையை இங்கே வரும்படி செய். ஆகா! எவ்வளவோ தெரிந்த பரம ஞானியான அந்த மூதாட்டிக்கு இந்த தர்ம நியாயம் ஏன் தெரியவில்லை? என்னை ஏன் இந்தப் பாவம் செய்யும்படி ஏவினார்? அல்லது அவருடைய சொந்தப் பிள்ளையின் பேரிலேதான் அவருக்கு என்ன கோபம்? தாயின் இயற்கைக்கே மாறான இந்தக் காரியத்தில் அவருக்கு ஏன் இவ்வளவு பிடிவாதம்? மதுராந்தகன் ஏதோ சிவபக்தியில் ஈடுபட்டுச் சந்நியாசியாகப் போகிறேன் என்று சொல்லிக் கொண்டிருந்த போது அதற்கு நியாயம் உண்டு. இப்போது அவனுக்கே இராஜ்யம் ஆளும் ஆசை வந்திருக்கும்போது இன்னொருவனுக்கு எப்படிப் பட்டம் கட்டலாம்!"

"அப்பா! இராஜ்யம் ஆள ஆசை இருக்கலாம்; அதற்குத் தகுதி இருக்க வேண்டாமா?"

"ஏன் தகுதி இல்லை? மகானாகிய கண்டராதித்தருக்கும் மகாஞானியான மழவரையர் மகளுக்கும் பிறந்த மகனுக்கு எப்படித் தகுதி இல்லாமற் போகும்?"

"தகுதி இருக்கட்டும்; இராஜ்யத்தின் குடிகள் அதற்கு ஒப்புக் கொள்ள வேண்டாமா?"

"குடிகளுடைய அபிப்பிராயத்தைக் கேட்பதாயிருந்தால், அவர்கள் உன் தம்பிக்கு உடனே பட்டம் கட்டிவிட வேண்டும் என்பார்கள். அது நியாயமா? அருள்மொழிதான் அதை ஒப்புவானா?... அதெல்லாம் வீண் யோசனை மகளே! எப்படியாவது உன் பெரிய பாட்டியை இங்கே சீக்கிரம் வரும்படி செய்! நான் யமனோடு போராடிக் கொண்டிருக்கிறேன் என்று எழுதி அனுப்பு; என்னை உயிரோடுபார்க்கவேண்டுமானால்உடனே புறப்பட்டு வரவேண்டுமென்று சொல்லி அனுப்பு..."

"அது ஒன்றும் அவசியமில்லை, அப்பா! தஞ்சைத் தளிக்குளத்தார் கோயிலுக்குத் திருப்பணி செய்ய வேண்டுமென்ற விருப்பம் பெரிய பிராட்டிக்கு இருக்கிறது. அதைக் குறிப்பிட்டுஇச்சமயம்வரும்படிஎழுதி அனுப்புகிறேன். அதுவரை தாங்கள் அலட்டிக் கொள்ளாமல் பொறுமை

## அருள்வாக்கு



லோகம் முழுவதையும் பகவானுடையதாகப் பார்த்து அதற்கேற்ப எப்படி நடக்க வேண்டுமோ அப்படி நடப்பதே மனுஷ்யர்களின் தர்மம். தனக்கென்று மட்டும் இவன் செய்து கொள்கிற காரியங்கள் இவனை அதர்மத்தில்தான் தள்ளும். எனவே, இப்போது இவனுக்கு இருக்கிற சுயநலத்தைக் குறைக்க வேண்டும். இவனுக்கு ஈசுவரனின் நினைப்பை உண்டாக்கி, அவனுடைய உடைமையே உலகமெல்லாம் என்ற அறிவை ஏற்படுத்த வேண்டும்' என்ற அடிப்படையில்தான் சகல மதங்களும் உண்டாகியிருக்கின்றன. 'உன் ஆசைப்படி நடந்து கொண்டு உனக்கென்றே சொத்து சேர்த்துக் கொள்' என்று சொல்கிற மதம் எதுவுமே இல்லை. தன்னை முக்கியமாக நினைத்துக் கொள்கிற வரையில் இவன் சுயநலத்துக்குத்தான் காரியம் செய்து கொள்வான் என்பதால் அத்தனை மதங்களும் கடவுள் என்கிற ஒன்றை இவனுக்குச் சொல்லி, 'அப்பா, பிரபஞ்சம் முழுவதையும் செய்த அந்த மகாசக்தியின் முன் நீ ஒன்றுமேயில்லை' என்று காட்டி இவனுடைய அகங்காரத்தைக் குறைக்கின்றன. அவனைப் பிடித்து விட்டால் நம் மூளையைச் செய்த அவனே அதை எப்படித் திருத்த வேண்டுமோ அப்படித் திருத்தி நம்மை நம் தர்மத்தில் ஈடுபடுத்தி விடுவான் என்பதால் பக்தியையே பெரும்பாலான மதங்கள் முக்கியமாக வைத்திருக்கின்றன.

ஆனாலும் கடவுள் என்று ஒரு தத்துவம், அதனிடம் பக்தியில் மனத்தைத் தோய்க்க வேண்டும் என்று மட்டும் சொல்லி விட்டால் சாமானிய ரீதியில் அதைப் பிடித்துக் கொண்டு ஸ்திரமாக நிற்க முடியவில்லை. பக்தியையும் காரிய ரூபத்தில் காட்டுவது என்றாலே சாதாரண ஜனங்களால் முடிகிறது. இதற்காகத்தான் ஒவ்வொரு மதத்திலும் சடங்குகள், — சந்தியாவந்தனம், ப்ரேயர், நமாஸ் — எல்லாம் வந்திருக்கின்றன. லோக வாழ்க்கையில் இருந்து கொண்டே இப்படி பக்தி செய்கிற போது உலகில் எப்படி நடப்பது இவனுக்கு தர்மம் என்பதை மதங்கள் சொல்கின்றன. 'எல்லோரிடமும் அன்பாக இரு; தியாகம் பண்ணு சேவை பண்ணு!' என்று இப்படி எல்லாம் அத்தனை மதங்களும் சொல்கின்றன. இப்படி இவன் வாழ்க்கை நடத்தி விட்டால் அப்புறம் உடம்பு போன பின் உயிரானது அந்தக் கடவுளிடமே போய்ச் சேர்ந்துவிடும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

யாயிருங்கள், அப்பா!"

இவ்விதம் கூறித் தந்தையிடம் விடைபெற்றுக் கொண்டு குந்தவை தன் இருப்பிடத்துக்குச் சென்றாள். வழியில் அன்னை வானமாதேவியைச் சந்தித்தாள். "அம்மா! இனிமேல் என் தந்தையை ஒருகண நேரம் கூட விட்டுப் பிரியாதீர்கள்! மற்றவர்கள் போய்ச் செய்ய வேண்டிய பூஜைகளைச் செய்யட்டும்!" என்றாள்.

குந்தவையின் உள்ளத்தில் சிலகாலமாக ஏற்பட்டிருந்த ஐயங்கள் இப்போது கொஞ்சம் தெளிவு பெறத் தொடங்கியிருந்தன. கன இருட்டாயிருந்த இடங்களில் கொஞ்சம் வெளிச்சம் தெரிய ஆரம்பித்திருந்தது. தன் தந்தைக்கும் சகோதரர்களுக்கும் விரோதமாக ஏதோ ஒரு பயங்கரமான மந்திர தந்திர சூழ்ச்சி நடைபெற்று வருகிறது என்பதை அவள் அறிவு நன்கு உணர்த்தியது. ஆனால் அது எத்தகைய சூழ்ச்சி, எப்படி எப்படியெல்லாம் இயங்குகிறது என்பதை முழுதும் அவளால் அறிந்து கொள்ள முடியவில்லை. சோழ மகாராஜ்யத்துக்கும் அந்த ராஜ்யத்துக்குத் தன் சகோதரர்கள் பெற்றுள்ள உரிமைக்கும் பேரபாயம் ஏற்பட்டிருக்கிறதென்பதை அவள் உணர்ந்தாள். அந்த அபாயத்திலிருந்து அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பு பெண் பாலாகிய தன் மீது சுமந்திருப்பதாகவும் நம்பினாள்.

(தொடரும்)

# திருச்செந்தூர் இன்று பாபநாசம் நாளை!

**போட்டிக் கதை — 5**

"அம்மா!"

"என்னடா?"

"இன்னிக்கு நான் திருச்செந்தூர் போய்ட்டு வரேன்."

"போய்ட்டு வாயேன்டா."

"ஒரு புன்னகையைத் தாய்க்குத் தந்து விட்டு பிரபாத் கிளம்பினான்.

"பிரபாத்!"

"என்னம்மா?" என்று கேட்டபடி ஒரு நிமிடம் தேங்கித் திரும்பினான்.

"பைக்லயா போகப்போறே?"

"இல்லேம்மா!"

"அப்புறம் மாருதியிலே போகப் போறியா?"

"இல்லேம்மா!"

"அப்படின்னா..., பென்ஸ்தானே நிற்குது. அதையா எடுத்துட்டு போகப்போறே? அம்பாஸடர்ல தாத்தா மார்கெட்। போயிருக்கார்."

"பென்ஸ்லேயும் போகலே..."

"பின்னே?"

"பஸ்ல போகப்போறேன்."

"பஸ்லயா!"

அவள் வியந்து முடிக்குமுன், அவன் காம்பவுண்ட் கேட்டைப் பின்னுக்குத் தள்ளியிருந்தான். சியாமளா கண்ணாடியைத் தள்ளிக் கொண்டு வியப்பாய் நின்றாள்.

"பிரபாத்துக்கு - இன்னிக்கு 'என்ன ஆச்சு? பஸ்ல போறேன்னு சொல்றானே! இதோ இருக்கிற தியேட்டருக்குப் போறதானாக் கூட பைக்கை அலறவிட்டுப் போவானே! திருச்செந்தூர் வரை பஸ்ல போறதாச் சொல்றானே! பஸ்லோட நச நசத்த கூட்டத்திலே இவன் எப்படிப் போகப்போறான்?"

ஆச்சரியத்தை வாய்விட்டே புலம்பித் தீர்க்க முயன்றாள் சியாமளா.

அப்போது மாடியிலிருந்து 'தீர்த்த' வாரி முடிந்து, அந்த வாசனை மாறாதபடி, அதன் பிரதிபலிப்பான முகக்கோணல்களுடன் கேசவ் வந்து கொண்டிருந்தார்.

"என்ன சியாமளா, என்னவோ தானாகப் பேசிக்கொண்டு நிற்கிறாயே... என்ன விஷயம்?" என்று கேட்டபடி அருகில் வந்து நின்றார்.

"நீங்களானால் 'இப்படி' வந்து நிக்கிறீங்க! உங்க பிள்ளையானால் திருச்செந்தூர் போறேன்னு சொல்லிட்டு, பஸ் ஸ்டாண்டுக்கு நடந்தே போறான்."

"திருச்செந்தூர் போறானுமா, ஏனாம்?"

"திருச்செந்தூருக்கு எல்லாரும் எதுக்குப் போவாங்க? முருகப் பெருமானைத் தரிசனம் பண்ணப் போவாங்க! இவனும் போயிருக்கான். அதுவும் பஸ்ல போறானாம்!"

"ஏனாம்! வரிசையாய் நிற்கிற கார்களிலே ஒண்ணை எடுத்துக்கிட்டுப் போலாமே! இல்லே ஜப்பானிய ஹோண்டாவை இவனுக்குன்னே தருவிச்சேன். அதுல போகலாம். இத்தனையையும் விட்டுட்டுப் பஸ்ல போறானுமா? பஸ்லதான் வருவேன் அப்படின்னு ஏதாவது வேண்டுதலோ என்னவோ?" — சிரித்தார்.

சியாமளா சிரிக்கவில்லை.

"ஸ்டேட்ஸுக்கு அனுப்பிப் படிக்க வச்சோம். ஆனால், அவன் என்னடான்னா, கோட்டைக்கருங்குளம்மண் வாசனை மாறாம இருக்கான். அவனோட தாத்தா கூட மாறிட்டார். சொளைட்டிக்கு ஏற்றமாதிரி மாறிட்டார். மார்கெட். போறதானாக்கூட டிரைவரைக் கூப்பிட்டு வண்டியை எடுக்கச் சொல்றார். இவன் என்னடான்னா, திருச்செந்தூருக்குப் பஸ்ல போறானாம்! இவன் பஸ்ல போறதைப் பார்க்கிறவங்க நம்மை என்ன சொல்ல மாட்டாங்க! லட்சக்கணக்கிலே பணத்தை வச்சுக்கிட்டிருந்தும்கூட, பையனைப் பஸ்ல அனுப்பறாங்களேன்னு சொல்ல மாட்டாங்க! நம்ம ஸ்டேட்டஸுக்குத் தகுந்த மாதிரி நடக்கணும்னு பையனுக்கு ஏன் தெரியலே?"

கவலையுடன் அவள் சொன்னாள்.

'அதானே!' என்பதுபோல் கேசவ் பார்த்தார்.

"நல்லவேளை, அந்தக் காலம்போல நடந்தே போகப்போறேன்னு சொல்லாம, பஸ்லயாவது போறேன்னு சொன்னானே, அது வரை நல்லது" என்றார் கேசவ்.

"சொல்ல முடியாதுங்க, நாளைக்கு அதையும் செய்வான். காவியுடுத்துக் காவடி எடுத்துப் போனாலும் போவான். நல்ல பையன் நமக்குன்னு வந்தான்" என்றாள் சியாமளா.

தங்களின் பிள்ளை பணக்காரத்தனமாய்ப் பயணம் பண்ணாமல், பஸ்ஸில் பயணிப்பது ஹைசொஸைட்டியைச் சேர்ந்தவர்

**உமா கல்யாணி**

களான தங்களின் சுயகௌரவத்தை வெகுவாகப் பாதிக்கிற விஷயம் என்பது போன்று இருவரும் தாபமுடன் பேசிக் கொண்டிருந்தனர்.

**கொ**ஞ்சம் அதிர்ந்து, நிறைய வேதனைப்பட்டு மகனை நோக்கினாள் சியாமளா.

இப்போது இவன் காவியில் வேஷ்டியும், ஒரு ஜிப்பாவும் போட்டுக் கொண்டானானால், இளம் துறவிதான். ஏனெனில் ஷேவ் பண்ணி வாரம் தாண்டியிருந்தது. அலைச்சலில் முகவாட்டம் தெரிந்தது. தோளில் ஒரு ஜோல்னாப் பையும், நாலு முழ வேட்டியும், சாதாரக டெரிகாட் சட்டையும், நம் நாட்டுக் கைக்கெடிகாரமுமாகக் காலில் ஹவாய்ச் செருப்பு மாட்டி அவன் பயண ஆயத்தத்தில் இருந்தான்.

ஸ்டேட்ஸிலிருந்து படிப்பை முடித்து வந்த மகன், ஹைஸொஸைட்டி பிள்ளைகளுக்கு டாம்பீகமாக விருந்து கொடுத்து, அவர்களுக்குக் கம்பெனி கொடுத்து, டூ வீலர்ஸையும், ஃபோர் வீலர்ஸையும் தெருக்களில் அலறவிட்டு அமர்க்களம் பண்ணாமல், சாமியார்த்தனமான ட்ரஸ்ஸுடன், திருச்செந்தூர் போகிறேன், கன்னியாகுமரி போகிறேன் என்று அலைகிறானே என்கிற எரிச்சல்!

இப்போது எங்கே போகிறானோ?

ஆனால் ஒன்று, எங்கே போவதானாலும் நிதானமாய் இருக்கிற அம்மாவிடம் வந்து, அட்சதை வாங்கிப்போட்டுக் கொண்டு தான் போகிறான்.

அப்பாவிடம் முடியாது. அவர் நிதானித்திருக்கிற நேரத்திற்காகக் காத்திருக்க வேண்டுமே!

தன் முன் வந்து நின்ற மகனின் கோலத்திற்காக மகா எரிச்சல் கொண்டாலும், தன் அபிப்பிராயம் இப்போது அவனிடம் எடுபடாது என்பதால் வெறுமனே பிரபாத்தை ஏறிட்டாள்.

''அம்மா!''

''என்னடா பிரபாத்?''

''இன்னிக்கு நான் பாபநாசம் போறேன்.''

''ம்...''

''ஒரு வேளை லேட் ஆனால் நைட் வரமாட்டேன். வீணாய் என்னை எதிர்பார்க்க வேண்டாம்.''

''ஏண்டா?''

''அப்படியே செங்கோட்டை வழியே அச்சன் கோவில் வரை போய் வரணும்.''

''ஆமா, பாபநாசம்... அச்சன் கோவில் என்று கோவில் கோவிலாய்ச் சுற்று...''

இதைக் கேட்க அவன் இல்லை. எப்போதோ அவன் நின்றிருந்த இடம் காலி.

''ஹூம், இவனைப் போய்ப் பெத்தேனே! ஸ்டேட்ஸிலிருந்து வந்ததும் இந்த ஜில்லாவே மூக்கில் விரல் வைக்கிறமாதிரி, இவனோட கல்யாணத்தை ஓஹோன்னு நடத்தணும். பார்த்தவங்க அசந்து போயிடணும்னு கற்பனை பண்ணி வச்சிருந்தேனே! காந்தி





**நிருபர்: உங்க மனைவி உங்களை விவாக ரத்துப் பண்ணப் போறாங்களாமே?**

**நடிகையின் கணவன்: ஆமாங்க. அப்படித்தான் பத்திரிகைக்குப் பேட்டி கொடுத்திருக்கா...**

**— மணியன் தர்மலிங்கம்**

மதி பஸ்ரூட் ஓனர் எப்ப வருவான்னு காத்துக் கிடந்தார். அவரோட ஒரே மகள் பிரேமலதாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா, அவ்வளவு சொத்தும் இவனுக்கேதான். நாங்களும் தயாராய் இருந்தோம். இவன் என்னடான்னு காஷாயம் உடுத்தாத சாமியாராய் ஆகிட்டான். அவர் என்னடான்னு, பெண் பார்க்க எப்ப வர்றீங்கன்னு போன்மேலே போன் போட்டுக் கேட்கிறார். இவனோ கால்லே சக்கரம் வச்சுக் கட்டின மாதிரி ஓடிக்கிட்டே இருக்கான். வீட்ல தங்க மாட்டேங்கிறான். பெண்வீட்டார் அவசரப்படுறாங்கன்னு சொன்னால், தனக்கொண்ணும் அவசரமில்லேன்னு சொல்லிட்டுப் போயிடறான்...''

தானாய்ப் புலம்பினாள் சியாமளா.

''என்ன சியாமளா உனக்குள்ளேயே ஏதோ பேசிக்கிட்டு நிக்கிறே? என்ன விஷயம்?''என்று 'வாசனை' மாறாத குரலில் கேட்டார் கேசவ்.

''அப்படி ஒரு நிலைமைக்கு ஆளாக்கிட்டானே நம்ம பிரபாத். அவனைச் சுற்றி என்னவெல்லாம் கனவு கண்டு வச்சிருந்தோம். இப்போ அத்தனையும் அப்செட் ஆகிற மாதிரி பண்ணிட்டானே!''

''இப்ப எங்கே போயிருக்கான்?''

''பாபநாசத்துக்கு.''

''ஏன், அகஸ்திய முனிவருக்கு அடுத்த முனிவராய் அங்கே போய் நின்னு தபஸ் பண்ணப் போறானாமா?''

''பண்ணினாலும் பண்ணுவான். பார்த்தால் அப்படித்தான் தெரியுது. ஒரு காவி டிரஸ் மட்டும்மாட்டினான்னா, அசல் சன்யாசிதான். இப்பவே எழுபது சதம் சாமியாராவே தெரியுது. அப்புறம் நூறு சதம் ஆயிடுவான்.''

''இப்ப அவனை என்ன பண்றது? எப்படி மாத்துறது?''

''எப்படியும் மாத்தி ஆகணும். ஒரே மகனை. அப்படிப் போகும்படி விட்டுடலாமா? நாளைக்கு எல்லாரும் நம்மைத்தான் சொல்வாங்க.''

''அப்ப, அவன் இன்னிக்கு பாபநாசத்திலேயிருந்து திரும்பி வந்ததும் ஒரு பிடி பிடிச்சிடு.''

''ஒரு வேளை தான் இன்னிக்கே வருவான்.''

''இல்லேன்னா?''

''நாளை வருவேன்னு சொல்லிட்டுப் போயிருக்கான்.''

''அப்படியா?''

''நான் கேட்கிறப்ப நீங்களும கூட நின்று நாலு கேள்வி கேட்கணும். அதனாலே நிதானம் தவறும இருங்க.''

''அடி, நான் 'போட்டாக்'கூட 'லெவலோ'ட தாண்டி இருப்பேன்.''

''ஆமா இருப்பீங்க,'' என்று நக்கல் சேர்த்துச் சிரித்தாள்.

''பிரபாத்!''

அம்மாவின் அழைப்புக்கு, புறப்பட்டவன் நின்றான். 'என்ன?' என்கிற பார்வை கொடுத்தான்.

''கொஞ்சம் உக்காரு. உன்கிட்டே நானும் அப்பாவும் பேசவேண்டியதிருக்கு'' என்றாள் சியாமளா.

அவன் அப்பாவைப் பார்த்தான். 'அப்படித்தான்' என்றது அவரின் பார்வையும்.

கொஞ்சம் தயங்கிவிட்டு' ஸோபாவில் அமர்ந்து கொண்டான்.

'இப்ப நீங்க சொல்ல வேணடியதைச் சொல்லலாம்' என்கிற பார்வை பார்த்தான்.

''டேய் பிரபாத், இப்போ உன்னோட நடவடிக்கை எல்லாமே புதிராய் இருக்கு. நம்ம அந்தஸ்துக்குச் சம்பந்தமில்லாத வேஷமெல்லாம் போடுறே. அது நம்ம இமேஜைப் பாதிக்கும்னு தெரியுமில்லியா? ஒரு ஹைஸொஸைட்டியைச் சேர்ந்த நீ, ஒரு மிடில் கிளாஸை விடவும் மட்டமான தரத்துக்கு இறங்கி, நடையுடை பாவனைகளை எல்லாம் மாத்திக்கிட்டுத் திரிகிறேன்னா, அதுக்கு என்னமோ ஸ்ட்ராங்கான பின்னணி இருக்குன்னு நினைக்கிறோம். சரிதானா?'' என்று கேட்டாள் சியாமளா.

''சரிதான்'' என்றான் நிதானக்குரலில் பிரபாத்.

அந்தப் பதிலும், அந்த அபரிமிதமான நிதானமும் இவர்களிடம் பதற்றத்தைக் கொண்டு வந்தன.

ஏதாவது இசகுபிசகாகப் பண்ணி வைத்திருப்பானோ? இந்த வயதில் வேறு எதுவாக இருக்கமுடியும்? எவளையாவது ஒரு அனாதையைக் காதலித்து விட்டு, அவளுக்காக இப்படி ஏழை வேஷம் கட்டுகிறானோ?

அப்படியானால்,

போச்சு! எல்லாமே போச்சு!

''ஏண்டா... பின்னணி இருக்குன்னு சொல்றியே, அது என்ன பின்னணிடா?''

# ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கியின் பெருகிவரும் கூட்டத்திலே சேருங்கள்.




**ஸா:ப்ட் அன்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷன். பெண் – அழகுப் படைப்பாளர் லக்மே அளிப்பது.**

ஏராளமான பெண்கள் ஸா:ப்ட் அன்ட் ஸில்க்கி ஹேர் மூவிங் லோஷனின் பெருகிவரும் கூட்டத்திலே சேர்ந்து ருகிறார்கள். இதில் வியப்பில்லையே! காரணம், ஸா:ப்ட் அன்ட் ஸில்க்கி லோஷன் உபயோகிப்பதற்கு மிகவும் வசதியானது.

இது சீராகவும் எளிதாகவும் பரவுகிறது.

அதாவது, இதிலே சள்ளை இல்லை, தொல்லை இல்லை. அதைவிடவும் ஒன்று: இதை தயாரித்தவர்கள் லக்மே! இதே க்மேயிடம்தான், அழகு மற்றும் சருமப் பராமரிப்பிற்காக பண்கள் முழு நம்பிக்கை வைத்துள்ளனர்.

வாருங்கள் நீங்களும் ஸா:ப்ட் அன்ட் ஸில்க்கியின் பெருகி ரும் கூட்டத்திலே சேருங்கள்.

பட்டுப்போன்ற மென்மையை ங்கமெங்கும் அளியுங்கள்.



"ஆகா!...எத்தனை வசதி."



**லக்மே**

ஜனாதிபதியின் தங்கப்பதக்கம் பெற்ற முதல் தமிழ்ப்படம்

ORWO

பாராட்டுக்கள்









AVM PRODUCTIONS

எம். சரவணன் எம். பாலசுப்ரமணியன் எம்.எஸ். குகன்

ஏவிஎம் மின்

# சம்சாரம் அது மின்சாரம்





ORWO COLOR VIJAYA LAB

இசைக்கு AVM audio

சங்கர்-கணேஷ் கவியரசு வைரமுத்து N. பாலகிருஷ்ணன் பால்துரைசிங்கம்

B. நாகராஜன் புலியூர் சரோஜா நேஷனல் செல்லையா S. பாண்டியன்

முயற்சி திருவினையாக்கும்

''இப்ப நீங்க காப்பாத்துறீங்களே உங்க ஹைஸொஸைட்டி இமேஜ், அதை இனிமேல் அழிஞ்சிடாதபடி தக்க தான்...''

''ஓ... அதுக்குத்தானு... இந்த வேஷமெல்லாம்? அதாவது நீ மிடில் க்ளாஸ்போல ஆக்ட் பண்ணினு, எங்களோட ஹைக்ளாஸ் இமேஜ் காப்பற்றப்படுமாக்கும்.''

''ஆமா! ஆமா!''

''நல்லாக் காப்பாத்தினேடா. இப்பவே அவனவன் என்னை, 'உன் மகனுக்கென்னடா ஆச்சு?' ன்னு கேட்டு உசிரை வாங்குறான். நீ என்னடான்னு எங்க இமேஜ் கெட்டுடாம இருக்கிறதுக்காக வேஷம் போடுறேன்னு சொல்றே. ரொம்ப நல்லாயிருக்கு உன் பதில்! இப்ப எங்க இமேஜை அழிக்கிறதும் இல்லாம, அதுக்காகவே வேஷம் போடுறேன்னு புளுகுதல் வேறயா? வேற என்னவோ விஷயம் இருக்கு. ஏண்டா இப்படி எங்களுக்கு மானம் போகிற மாதிரி லோவா நடந்துக்கிறே?'' என்று கேட்டார் கேசவ்.

''இப்ப இப்படி நான் லோவா நடக்கலேன்னு, நாளே நம்ம பொஸிஷன் லோவாப் போயிடும். உங்க இமேஜ் இருப்பிடம் தெரியாமப் போயிடும்.

''என்னடா உளர்றே?''

''அப்பா, நான் உளறலே, நிதானமாவே இருக்கேன். இப்ப நீங்க காப்பாத்துற இமேஜை விடாம பேணணும்னு, நாளேய நிலைமை என்ன? ஒவ்வொரு நாளும் நம்ப வீட்ல நடக்கிற செலவை ஈடுகட்டணும்னு...''

''ஓ... நீ சிக்கனமாய் இருந்து மிச்சம் பண்றியா? அதுக்கு அவசியம் இல்லேடா. இன்னும் பத்துத் தலைமுறை காலத்துக்கும் வருமானம் வர்ற சொத்து என்னுடையது. நீ ஒண்ணும் சாமியார் வேஷம் போட்டு மிச்சம் பிடிக்க வேண்டாம். கேசவோட ஸன் பிரபாத்துன்னு சொல்ற மாதிரி டீக்கா இரு. அப்பத்தான் என் இமேஜ் கெட்டுப் போகாம காப்பாத்தப்படும்.''

பிரபாத் சிரித்தான்.

''ஏண்டா இப்படிச் சிரிப்பு?''

''அப்பா, கனவுலேயும் போதையிலேயுமே இருக்காம நனவுக்கும் தெளிவுக்கும் வாங்க. உண்மை உறைக்கும். உருப்பட வழி தெரியும்.''

''புத்தி சொல்றியாடா?''

''தேவைப்பட்டால்... இடத்தைப் பாராமல் புத்திக் கொள்முதல் பண்ணிக்க வேண்டியதுதான்.''

''டேய்...!''

''கோபப்படாதீங்க அப்பா. உண்மை எப்பவுமே கசக்கும். அதுக்காக உண்மையைச் சந்திக்காம, முடியுமா? இதே ரீதியிலே போனால், உங்க ஹைஸொஸைட்டி இமேஜைக் காப்பாத்த, இருக்கிறதை எல்லாம் விற்கத்தான் வேணும். அப்பத்தான் செலவு ஓடும்...''

''ஏன்... வருமானம் இருக்கில்ல?''

''அதையெல்லாம் புரிஞ்சுக்கிட்டா, இப்ப



''கிணறு தோண்டிக்கறதுக்காக நம்ம ஊழியர்களுக்கு 'லோன்' 'தர்றோம்'னு சொன்னது ரொம்பத் தப்பாப் போச்சு சார்...!''

''ஏன், என்ன ஆச்சு?''

''மாடி போர்ஷன்ல குடியிருக்கறவன் கூட, மொட்டை மாடியில் கிணறு தோண்டணும்னு அப்ளிகேஷன் போட்டிருக்கான்!''

— கிரிஜா மணாளன்.

இவ்வளவு பேசின பிறகும் புரியாம இப்படிச் சாடுவீங்களா? அப்பா, நான் அமெரிக்காவிலேயிருந்து வந்ததும் நேரா நம்ம கம்பெனி ஆபீஸுக்குப் போனேன். முதலாளியான உங்க நேர் பார்வை இல்லாததாலே கணக்கு வழக்கு ஒரே சுந்தர கோலம்...''

''மானேஜர்...?''

''நீங்க மெச்சிக்குங்க. உங்க மானேஜர் உங்களைப் போல போதையோடதானே இருப்பார்! நிர்வாகம் இல்லே; வருமானம் சரி இல்லே; கம்பெனி நஷ்டத்திலே ஓடுது.

''பிரபாத்!''.

''அதைச் சீர்பண்ண வேண்டாமா? எங்கே குளறுபடின்னு கண்டுபிடிக்க வேண்டாமா? அதான் நம்ம கம்பெனி பஸ்கள் ஓடுற ரூட் முழுவதும் அடையாளம் காட்டாம பயணம் போனேன். டிரைவர், கண்டக்டர்கள் சீருடையில் இல்லே. பஸ்கள் எல்லாம் பொலிவிழந்து டொக டொக வண்டியாப் போச்சு. பயணிகள் எல்லாம் நம்ம சியாமளா டிரான்ஸ்போர்ட் கம்பெனி வண்டி என்றாலே ஏறப் பயப்பட்டு, வேற வண்டிகளிலே போயிடறாங்க. ஊழியர்களுக்குச் சரியான சம்பளப் பட்டுவாடா இல்லாததாலே, தில்லுமுல்லு பண்றாங்க. இவ்வளவு நாளும் அலைஞ்சு திரிஞ்சு குறைகளைக் கண்டாச்சு. இனிமே எல்லாத்தையும் சீர் பண்ணணும். அப்பத்தான் உங்க பணக்கார இமேஜ் தொடர்ந்து காப்பாற்றப்படும். இல்லே... இல்லே...''

''பிரபாத்!''

''டேய் பிரபாத்!''

''சரி... இப்பப் புரிஞ்சுதா? இனியாவது ஸ்டெடியாய் இருங்க. இப்ப நான் ஷேவ் பண்ணிக்கிட்டு, ட்ரஸ் சேஞ்ச் பண்ணிக்கிட்டு, ஹோண்டாவிலே ஆபீஸ் போகப் போறேன்.''

உண்மைகள் வந்து அறைந்த வேகத்தில் பிரமைகள் அகல, இவர்கள் நிதானப்பட்ட போது, அவன் பாத்ரூமினுள் நுழைந்து கொண்டிருந்தான்.

# நிழல் யுத்தம்

25

நெருப்பில் நிறைய வகை. பொசுங்கலிலும் நிறைய வகை. பஞ்ச பூதத்தின் உருமாற்றத்தை விரைவில் நடத்துகிறது நெருப்பு. விறகைக் கரியாக்குகிறது. அமிர்தத்தை ஆவியாக்குகிறது. இரும்பை நீராக்குகிறது. முற்றிலும் எதிர்மறையான குணத்தை, உருவத்தை, நெருப்பு தான் தகிக்கும் பொருளுக்கு உடனே வழங்கி விடுகிறது.

வெஞ்சினமும் பொறுமையும் இதையே தருகின்றன. உடனே மாற்றம் ஏற்படுகிறது. மலர்ச்சியாய் உள்ள மனமே உதவி செய்யும். உடனிருப்பவரை அறிந்து கொள்ளும். கோபம் பொசுங்கின மனம் விஷமாகிறது. வன்முறைக்கு நகருகிறது. அடித்தலும், புடைத்தலுமே வன்முறையல்ல. வார்த்தைகள் எகிறுவது மட்டுமே கோப வெளிப்பாடு அல்ல. கருவுதல் என்கிற குணம் மனிதனுக்கு உண்டு. அது கோபத்தின் எதிரொலி. கையாலாகாத கோபத்தின் கருவி.

வந்து வாசல் கதவைத் தட்டிக் கூப்பிட்ட என்னை அவமானப் படுத்தினாய் அல்லவா. இனி இது என் முறை. எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் இனி அவமானம் தருவேன். அலற வைப்பேன். அடிக்குப் பதிலடி தர முடியும். இன்னொரு அவமானமா? சரி; தாங்குவோம். புருஷன் கெஞ்சிக் கூப்பிட்டு மனைவி மறுத்ததை விட அவமானம் எனக்கு உண்டா? இதைக் காட்டிலும் வேறு என்ன தண்டனை தர முடியும். ஓர் அவமானம் வந்து கவிழ்ந்த பிறகு, மேலும் மேலும் வருவதில் என்ன வலி இருக்க முடியும்? முழங்கால் வரை சேறு பட்ட பிறகு, முதுகில் சேறு என்ன விசேஷம்? முகத்தில் தெறித்தால் என்ன பயம்?

எனக்கு இனி அவமானமில்லை. வெட்கமில்லை. அசிங்கம் இல்லை. முற்றிலும் நனைந்த பிறகு குளிர் இல்லை. ஆனால் உனக்கும் சேறு என்ன என்பதைக் காட்டுகிறேன். கை கொள்ளாமல் எடுத்து முகம் முழுவதும் பூசுகிறேன். வன்முறை அடிதடியில் மட்டும் இல்லை. வார்த்தை போதும். நடத்தை போதும்.

என்னை விட, என் அம்மாவை விட உனக்கு உன் உலகம் முக்கியம், இல்லையா? இதை உடைக்கிறேன், பார்!

காலையில் காப்பி கொண்டு வந்து லலிதா வாசல் பக்கம் பேப்பர் படித்துக் கொண்டிருந்த அப்பாவுக்கு அருகே வைத்தாள். முரளி பல் தேய்த்து விட்டு வந்தான். டவலால் முகம் துடைத்துக் கொண்டான். மாமனாரிடம் விரல் சொடுக்கி, பேப்பர் என்று கேட்டான். சங்கரன் நிமிர்ந்து விநோதமாய் அவனைப் பார்த்தார். ஏதும் பேசாமல் கையிலிருந்த 'ஹிந்து'வை அவனிடம் கொடுத்தார். லலிதாவுக்கும் இந்தச் செய்கை விநோதமாய்ப் பட்டது. ராத்திரி பிடித்த ஜுரம் இறங்கவில்லை என்ற நினைப்போடு உள்ளே போனாள். காப்பி கலந்தாள். அருகே கொண்டு போய் முரளிக்குப் பக்கம் இருந்த டீப்பாயில் வைத்தாள். நகர்ந்து உள்ளே போனாள். பேப்பரை மடித்து முரளி காப்பியைப் பார்த்தான். டம்ளரை எடுத்தான். மொத்த காப்பியையும் சுவர்மீது வீசினான். டம்ளரைத் தூக்கிப் போட்டான். மறுபடி பேப்பர் பிரித்தான்.



டம்ளர் எகிறி உள்ளே போய் உருண்டது. ஆளுயரத்துக்குச் சுவர் முழுவதும் காப்பி வழிந்தது.

"என்னாச்சு உங்களுக்கு?" லலிதா வாசலுக்கு வந்து கத்தினாள்.

"கையில் குடுடி காப்பியை. ஹோட்டலா நடத்துறே... டீப்பாய்ல வெச்சுட்டுப் போறதுக்குப் பெரிய சீமாட்டியா நீ..."

சங்கரனின் முகத்தில் இருட்டு அப்பிக் கொண்டது. தன் கடைசிக் கால வாழ்க்கை யுத்த வாழ்க்கையை விட மோசமாய் இருக்கும் என்று அவருக்குத் தெரிந்து விட்டது. குண்டுவீச்சின் போது கூட இல்லாத பயமும் பதற்றமும் இனி தினம் தினம் இந்த வீட்டுக்குள் வரும் என்று தெரிந்து விட்டது.

"எனக்கும் காப்பி கையில் கொடுக்கலை முரளி. பக்கத்துல தான்

வச்சா. உன் காரியம் ஆயிரம் இருக்கும். இதுக்கெல்லாம் கோபப்பட்டா முடியுமா?''

முரளி எட்டி அவருடைய காப்பி டம்ளரை எடுத்தான். மறுபடி எதிர்ச் சுவரில் அதையும் வீசினான். இன்னொரு வழிசல் சுவர் முழுவதும் படர்ந்தது.

''முரளி!'' சங்கரன் கோபத்தோடு எழுந்து நின்றார்.

''இந்த வீட்டில் நான் காப்பி குடிக்கிறதுக்கு முன்னாடி வேறெவனும் காப்பி குடிச்சா இதுதான் நடக்கும். எனக்கு மரியாதை தராமல் தெருவில் வர்றவன், போறவனுக்கு மரியாதை கொடுத்தால் இப்படித்தான் நடக்கும்.''



லலிதாவுக்கு அவன் காய் நகர்த்தும் இடம் பிடிபட்டு விட்டது. இருப்பினும் இதை எப்படி மடக்குவது என்று தெரியவில்லை. மடக்கலாம். ஆனால் ஆட்டம் வெற்றி தோல்வியின்றி முடியும். வெறும் வறட்சி நிலவும். வீடு முழுவதும் சோர்வு படரும். அப்பா குமைய நேரிடும். குழந்தை அல்லாடத் துவங்கும். வயிற்றில் வளரும் சிசு வேதனையில் நெளியும். மன்னிப்புக் கேட்கலாமா? காலில் விழுந்து அழலாமா?

அழுதால்... அழுதபிறகு...? என்ன முடிவு? 'இந்தா உன்னுடைய வெற்றி' என்ற சரணாகதிக்குப் பிறகு என்ன வாழ்க்கை தொடரும்? மலர்க் கண்காட்சியா? குடும்பம் என்கிற தோட்டப் போட்டியில் முதல் பரிசா? அந்தப் பரிசுக்கு இத்தனை வேதனை அவசியம்தானா? போன்சாய் என்று நசுக்கி நசுக்கி வளர்க்கப்பட்ட இந்த ஆலமரம் போல் வீடு இருக்கும். அதற்குப் பாராட்டு கிடைக்கும். எப்படி இது என்று வியக்க வைக்கும். இது அவசியம்தானா? ஆரோக்கியம்தானா? இப்படி ஒரு குள்ள ஆலமரம் தேவைதானா? இது இயல்பா? இதற்கு அந்த வித்தை அழித்து விடலாம்.

''முரளி! நான் உங்களுக்குப் பொண்டாட்டி. அடிமையில்லை. காப்பி கலந்து தர முடியுமே தவிர, கையில் வெச்சுக்கிட்டுக் காத்திருக்க முடியாது.''

லலிதா உள்ளே போனாள். குழாயைத் திறந்து பக்கெட் ஜலத்தை எடுத்து வந்தாள். அடித்து சுவர் மீது வீசினாள். காப்பி கறை சுத்தமாய் வழிந்து கீழிறங்கிற்று. வராந்தா முழுவதும் ஜலம் பரவியது. வீசிய ஜலம் முரளி மீதும் தெறித்தது.

முரளி கோபமாய் நாற்காலியை விட்டு எழுந்தான். சங்கரன் அவன் தோள்களைப் பிடித்துக் கொண்டார்.

யுத்தம் என்று வந்து விட்டால் அழிவு நிச்சயம். யாரோ ஒருவன் மரணம் நிச்சயம். எனவே யுத்தத்திற்கு முன்பு யுத்தம்

**பாலகுமாரன்**



"ஏற்றுமதியைக் கூட ஊக்குவிக்க மாட்டேங்கிறீங்களே!"

"என்ன ஏற்றுமதி செய்யறீங்க?"

"கோடிக் கணக்கான ரூபாயை ஸ்விஸ் பேங்குக்கு..."

— மணியன் தர்மலிங்கம்.

"உங்க போராட்டத்தின் லட்சியம் என்ன?"

"அது தெரிஞ்சா நாங்க ஏன் போராடப்போறோம்!"

— குத்தாலம் அமிதா.




நிற்பதற்கான சகல முயற்சிகளும் செய்வது நல்லது. மறுபடியும் மறுபடியும் சமாதானம் பேசுவது நல்லது. சமாதானம் பேசிக் காலம் தாழ்த்தி, இழப்பின் விளைவுகளைப் பற்றி யோசிக்க வைக்கலாம்.

"காப்பியைக் கையில் கொண்டு வந்து கொடுக்கணும். அவ்வளவுதானே? நான் செய்யறேன். நானே கலந்து நானே கொண்டு வந்து தர்றேன்."

சங்கரன் சமையலறைக்குப் போனார். காப்பி கலந்தார். கலக்கையில் கண்ணில் நீர் கட்டிக் கொண்டது. இருபத்தி மூன்று வயதில் வெள்ளைக்காரனுக்குக் காப்பி கலக்கச் சிங்கப்பூர் போனது நினைவுக்கு வந்தது. எதியோப்பியாவிலும், பிரான்ஸிலும் எச்சில் தட்டு அலம்பியது நினைவுக்கு வந்தது. இன்னிக்கும், இன்னிக்கும்... பகவானே... அந்த எச்சில் தட்டு எடுத்த போது இருந்த சந்தோஷம் கூட இப்போதி இல்லாம பண்றியே... கேவிக் கேவி அழத் தோன்றியது.

ஸோல்ஜர் அழக் கூடாது. வாழ்க்கை முழுவதும் யுத்தம். அதில் அவமானம் சகஜம். போராடு. தொடர்ந்து யுத்தம் செய்.

காப்பியை எடுத்து வந்து மாப்பிள்ளையிடம் பவ்யமாய் நீட்டினார். முரளியின் மனம் வேதனைப்பட்டது.

இந்தக் கிழவன் நல்லவன். உலகம் தெரிந்தவன். அனுபவத்தில் முதிர்ந்தவன். இவனிடம் நான் தெரிந்து கொள்ள ஆயிரம் உண்டு. இவனை இப்படி இழிவுபடுத்துவது தவறு. பாபம். ஆனால் யுத்தத்தில் தேரோட்டியைச் சில சமயம் அடித்து வீழ்த்த வேண்டியிருக்கிறது. குதிரைகளைக் கொல்ல வேண்டியிருக்கிறது. எதிரியைத் தனிமைப்படுத்த அவன் துணைகளைத் துண்டிக்க வேண்டியிருக்கிறது."

"காப்பியைக் கீழே வையுங்க."

"கையிலே வேணும்னு கேட்டேளே?"

"வைச்சுட்டுப் போங்கோ."

"இப்படிக் கோபப்பட்டா குடித்தனம் எப்படி நடக்கும் முரளி?" என்று சங்கரன் அமைதியாய்க் கேட்டார். காப்பியை டீப்பாயில் வைத்தார்.

"நாலு தரம் குச்சில குத்தினா புழுவுக்குக் கூடக் கோவம் வரும் மாமா. அதுவும் தலைதூக்கிச் சீறும்."

"இங்கே என்ன தப்பு முரளி?"

"ஒரே ஒரு தப்பு. உங்க பொண். அவள் வளர்ப்பு."

"அவள்தான் உன் வீட்டுக்குப் போறாளே...?"

"கார்த்தால காப்பி, மத்தியானம் சோறு ராத்திரி டிபன்கற மாதிரி வேளா வேளைக்குக் கொட்டிக்கோன்னு எனக்குப் போடற மாதிரி அதுவும் நடக்கிறது. டயம் டேபிள் போட்டுக் குடித்தனம் பண்ண இப்படிச் சில சமயம் நடக்கும்."

"வேறே எப்படி நடக்கணும்? சொல்லு..." சங்கரன் நிதானமாய்க் கேட்டார்.

"உன்னை விட்டால் ஆளே இல்லை எனக்குன்னு ஆடணும். உங்கப்பா தேவதை. நீ தெய்வம், உனக்குத் தாசி, உங்கம்மாவுக்கு வேலைக்காரின்னு ஜதி சொல்லி ஆடணும். ஏய்னு குரல் கொடுத்தால் அடிமையா வந்து நிக்கணும். நிக்கலைன்னா கோபம் வரும்..." லலிதா சீற்றத்துடன் பேசினாள்.

விளிம்பு உடைந்த பேச்சுக்கு நடுவே தகப்பன் எப்படி நிற்க முடியும்? இது அவர்கள் பிரச்னை. புருஷன் மனைவி சண்டை. சங்கரன் துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு வெளியே போனார். முரளி ஆபீஸுக்குப் போனான். துடைப்பம் போட்டுக் கழுவிய போதும் சுவரில் இரண்டு மலைகள் போல் எதிரும் புதிருமாய் இரண்டு காப்பிக் கறைகள் நின்றன. பார்க்கும் பொழுதெல்லாம் வேதனை கவிழ்த்தன.

முரளி சிண்டிக் கொண்டே இருந்தான்.

"பந்து போடு பந்து போடு என்று மாடி

# நீங்கள் முழுமனதுடன் நம்பக்கூடியவை இரண்டு.

கிரிக்கெட் வீரர் திலீப் வெங்சர்க்கர் உங்களைக் கைவிடமாட்டார். இம்முறையும் அவர் அனாயசமாக விளையாடி அற்புதங்களை நிகழ்த்துவார் என எதிர் பார்க்கலாம். அதே ஆட்டத்தினால் அவர் ''விஸ்டனின்'' மிகச்சிறந்த ஐந்து ஆட்டக்காரர்களில் ஒரு சிறப்பான இடத்தையும், கம்ப்யூட்டர் மூலமாக ''டிலாயிட்டிஸ்'' கணிப்பில் உலகத்திலேயே முதல்தரமான பேட்ஸ்மேன் என்ற பெயரையும் பெற்றுள்ளார். அதேபோல் உங்களுக்கு மிகச்சிறந்த தரமான நம்பக் கூடிய பொருளை விளம்பரப் படுத்துகிறோம்.

அதுதான் கிராம்ட்டன் கிரீவ்ஸ் கலர் டிவி.

இது மிக நவீன தொழில்நுட்பங்கள் பொருந்திய டெலிவிஷன் —உங்கள் உடமை யாக்கக் கூடிய இந்த விசேஷ டிவி. பல சிறப்பம்சங்களைக் கொண்டதாகும்.

இதைவிட பரிபூரண 12-மாத உத்தரவாதம் தருகிறது. மிக விலையுயர்ந்த பகுதியான பிக்சர் ட்யூபுக்குக்கூட இதன் காப்புறுதி உள்ளது.

இணையில்லா ஸர்விஸ் பின்பலம் உள்ளது.

நினைவிருக்கட்டும் காலமெல்லாம் உங்கள் நம்பிக்கைக்கு உரியது கிராம்ட்டன் கிரீவ்ஸ்.





ஆம், காத்துக்கொள்ள வேண்டிய எங்கள் பெயரும் புகழும் மிகப் பெரியது அன்றோ.

**Crompton Greaves** LIMITED

## கிராம்டன் கிரீவ்ஸ் டிவி
## வெங்சர்க்கருடன் இன்னமும் சாதனைகள் சில உண்டு.

கன்ஸ்யூமர் எலெக்ட்ரானிக்ஸ் & ஹவுஸ்ஹோல்டு அப்ளையன்ஸஸ்,* கிளை; நம். 3ஏ கோடம்பாக்கம் ஹை ரோடு,
த.பெ. நம். 3316, நுங்கம்பாக்கம், சென்னை 600 034.

# டீ உலகில் உயர் வட்டம்

# சக்கரா டீ

உயர் வகுப்பினர் பாராட்டும்
தேநீர்ச் செல்வம் சக்கரா டீ.
சொகுசான சுவைமண, திட
குணங்களின் முழுமை
வட்டம். தேநீரிலே
சுக போகத்தின் உயர்
வட்டம்: சக்கரா டீ.

உயர் வட்ட ரசிகர்களுக்கு
உயர் வளமுள்ள தேயிலை




## சக்கரா டீ



டாட்டா டீ லிமிடெட்
உலகிலேயே மிகப்பெரிய டீ கம்பெனி.

daCunha/TT/246/87/TM

ஹாலில் குழந்தையை அழைத்தான். கட்டைப் பந்து எடுத்துக் குழந்தை போட, போட்டால் முழு வேகத்தில் திருப்பினான். மறுபடியும் பந்து போடச் சொல்லப் பந்து அருகே வந்தது. பியானோவுக்கு எதிரே திரும்பி பியானோவை நோக்கிப் பந்தை அடித்தான். பியானோவின் மேல் ப்ளேவுட் மூடி படீரென்று உடைந்தது.

''அப்பா பியானோ வாசிக்கறு பார்'' என்று இரண்டு முஷ்டிகளால் பியானோவை மாறி மாறிக் குத்தினான். இழுத்துக் கட்டிய ஸ்பிரிங் கம்பிகள் தெறித்து விழுந்தன.

''டோ எ டியர்... எ ஃபீமேல் டியர்...'' என்று கொஞ்சிய அந்த இசைக் கருவி சுருதி கலைந்து பிளிறிற்று.

லலிதா ரணமானாள். ஒரே அடியில் புருஷனைக் கொன்று விடலாமா என்று ஆத்திரப்பட்டாள். சங்கரன் அவளை அழைத்து அவள் சிநேகிதி வீட்டுக்குப் போய் இருக்கச் சொன்னார்.

**வீ**டு மறுபடியும் மயானமாயிற்று.

வீட்டோடு மாப்பிள்ளை இருந்தான். மகள் குழந்தையோடு வெளியேறினாள். கிணறு தோண்டிப் பத்தடி ஆழத்தில் ஜலம் கிடைத்தது. ஆனால் உப்பு கரித்தது. கோவில் கட்டிக் கோபுரம் எழுப்பியாயிற்று. மூல தேவதை வெளியேறிவிட்டது. வீடு பாழ் மனையாயிற்று.

முரளி லலிதா இல்லாத நாலு நாட்களும் அமைதியாய் இருந்தான். அவளைப் பார்த்ததும் கோபம் மறுபடியும் வெல்கிறது.

''நான் நாலு நாட்கள் ஊர் போகிறேன்.'' என்று பெட்டி படுக்கை எடுத்துக் கொண்டு 'எங்கே போகிறேன்' என்று சொல்லாமல் புறப்பட்டான்.

அவன் போன மறுநாள் செய்தி வந்தது.

முரளியின் அம்மா ஆஸ்பத்திரியில் இருக்கிறாள். மயோகார்டிக் அட்டாக். மாரடைப்பு. நிலைமை மிக மோசம்.

சங்கரன் தலைதெறிக்க ஓடினார். மாமி கண் செருகிக் கிடந்தாள். மெல்லக் கண் விழித்து அரை மயக்கத்தில் பிள்ளையைக் கூப்பிட்டாள்.

பிள்ளையை எங்கே தேடுவது? பிள்ளையைக் கேட்ட தாய்க்கு என்ன பதில் சொல்வது?

கடவுளே... கடவுளே... இந்தத்தேசத்திற்கு மறுபடி யுத்தம் கொடு. போர் உண்டாக்கு. மனித மனங்களை அறியாது மரபுத் திமிரில் உழலும் இந்த ஜனங்களுக்கு உயிரின் விலையை உறவின் மதிப்பைக் கற்றுக் கொள்ள யுத்தம் கொடு.

சங்கரன் நிலை கொள்ளாமல் பதறினார். லலிதா அப்பாவின் தவிப்பைப் பார்த்து விட்டுப் பிரிவுக்கு ஆயத்தமானாள்.

(தொடரும்)

---

**மோ**கன் போட்டோகிராபர். கல்லூரி மாணவி ரூபிணியை அவரறியாமல் போட்டோ பிடித்து, அது ஒரு விளம்பரத்திற்குப் பயன்படுகிற வரை போய், அது ரூபிணியைக் காலேஜில் சஸ்பெண்ட் செய்யப்படுகிற அளவுக்குக் கொண்டுவிட, மோதலில் ஆரம்பித்து, அப்புறம் காதலாய் மாற, மோகன் தற்கொலை ஸ்டண்ட் செய்து... — ஆழமோ, அழுத்தமோ இல்லாத ஒரு சினிமாக் காதல்தான் படத்தின் மைய நரம்பு.

ரூபிணியின் அப்பா ஒரு ஸாடிஸ்ட்டாம்.

# நினைக்கத் தெரிந்த மனமே....

மனைவி கோயிலுக்கு டொனேஷன் கொடுத்தால் மனைவியை விட்டுவிட்டுக் கோவிலை எரிப்பாராம். ரூபிணி காதலனின் பெயரைப் பச்சைக் குத்திக் கொண்ட இடத்தைச் சிகரெட் வைத்துப் பொசுக்குவாராம். சொன்ன பையனை மகள் கல்யாணம் செய்ய மறுத்தால் காதலுக்கு உதவி செய்யும் அம்மாவின் மேல் கெரசினைக் கொட்டி... ச்சை, கதையில் திருப்பம் வேண்டும் என்பதற்காக இப்படியா?

டூயட்கள், டான்ஸ்கள், பாடல்கள் என்று



காதலின் மேலோட்டத்தில் பாஸ்லா செய்து பாதி ஃபிலிம் வீண். இளையராஜாவின் இசை இனிமை, இனிமை.

பேசாமல் ஆடியோ கேசட் வாங்குவதோடு திருப்திப்படுபவர்கள் பூர்வ ஜென்மங்களில் புண்ணியம் செய்தவர்கள்.

— ஜெயமன்மதன்



• கலெக்டர் பி. பாண்டியன்

# "இது மாதிரி கேள்விகளை

கல்கி: குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தில் செங்கல்பட்டு மாவட்டம் எத்தனையாவது இடத்தில் இருக்கிறது?

செங்கல்பட்டு மாவட்டக் கலெக்டர் டாக்டர் பி. பாண்டியன்: தமிழகத்தில் நாங்கள்தான் முதல் இடத்தில் இருக்க வேண்டும். ஆனால், எங்கள் செயல்பாடுகளைச் சரிவர அரசுக்கு எடுத்துச் சொல்லத் தவறி விட்டதால் மூன்றாவது இடத்தில் இருக்கிறோம்.

கல்கி: சுங்குவார் சத்திரத்தின் அருகிலுள்ள காந்தூர் மேட்டுக் காலனி, சோகண்டி ஆகிய ஊர்களில் சில பெண்களுக்குக் குடும்பக் கட்டுப்பாடு செய்த பிறகும் குழந்தை பிறந்திருக்கிறது!

கலெக்டர்: இரண்டொன்று அப்படி ஆகியிருக்கலாம்!

கல்கி: மதுராந்தகம் அருகிலுள்ள ஜமீன்எண்டத்தூர் அரிஜனக்காலனியிலிருக்கும் ஆண்களில் பலருக்கு ஏற்கெனவே கு. க. செய்யப்பட்டிருந்தும் மறுபடியும் அவர்களுக்குக் குடும்பக் கட்டுப்பாடு செய்யப்பட்டிருக்கிறது! இது அதிசயமாக இல்லையா? காரணம், வெறும் புள்ளி விவரங்களைக் காட்டுவதற்காக இப்படிச் செய்வதாகச் சொல்கிறார்கள். உண்மைதானா?

கலெக்டர்: நிச்சயம் அப்படியெல்லாம் செய்யப்பட்டிருக்காது.

கல்கி: நாங்கள் நேரில் சென்ற போது, அங்குள்ள பலரும் அப்படித்தான் சொன்னார்கள். இரண்டாவது முறையாக ஏன் சென்றீர்கள் என்று கேட்டபோது, நாற்பது ரூபாய் பணம் கொடுத்தார்களே அதற்குத்தான் என்றார்கள் அவர்கள்!

கலெக்டர்: ஒரு மூத்த பத்திரிகையான கல்கியிலிருந்து வரும் நீங்களா இப்படிப்பட்ட கேள்விகளைக் கேட்பது? வேறு கேள்விக்கு வாருங்கள்.

கல்கி: திருநின்றவூரிலிருக்கும் அரசினர் உயர்நிலைப் பள்ளியின் கட்டடம் மாட்டுக் கொட்டகையை விட மோசமாக இருக்கிறது!

கலெக்டர்: பள்ளிக்கென்று சொந்தமாக நிலம் ஏதும் இல்லை. அதனால்தான் நிரந்தரக் கட்டட வசதிகள் செய்துதர இயலாமல் இருக்கிறது. ஐந்து ஏக்கருக்கான நில மாற்ற ஆணை பெறப்பட்டதும் ஆவன செய்யப்படும்.

கல்கி: திருமழிசையில் தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் சுமார் நான்கரை லட்சம் செலவில் சாக்கடைக் கால்வாய்த் திட்டம் நிறைவேற்றப்பட்டுள்ளது. அது சரிவரக் கட்டப்படாததால், சாக்கடை நீர் ஓடாமல் தேங்கிக் கிடக்கிறது. மேலும் அது உறுதியாகக் கட்டப்படாததால் ஆங்காங்கே இடிந்து கிடக்கிறது.

கலெக்டர்: அதில் சாக்கடை நீர் சரிவர வெளியேறவில்லை என்ற புகாரைத் தொடர்ந்து 85 இல் மறுபடியும் அது சரி பார்க்கப்பட்டது. அதன் பிறகு தற்போது நீங்கள் புகார் சொல்கிறீர்கள். இது தொடர்பாகத் திருமழிசைப் பேரூராட்சியின் நிதி நிலைக்குத் தக்கவாறு நடவடிக்கை எடுக்கக் கோருகிறேன்.

கல்கி: திருமழிசையில் ஒரேயொரு குடிநீர்க் கிணறுதான் உள்ளது. அதுபோதவில்லை என்கிறார்கள். மேலும் அங்கு விபத்துக்கள் அடிக்கடி நடப்பதால் வாகனங்களின் வேகத்தைக் கட்டுப்படுத்த வேகத் தடை போட வேண்டியது அவசியம் என்கிறார்கள்.

கலெக்டர்: பேரூராட்சி நிதி வசதி போதுமானதாக இல்லாததால் கூடுதலாக ஒரு குடிநீர்க் கிணறு அமைக்க இயலவில்லை. அரசு மான்யம் ஏதும் கிடைத்தால் திருமழிசையில் கூடுதலாக ஒரு குடிநீர்க் கிணறு அமைக்கப்படும். வேகத் தடை அமைப்பது குறித்தும் தகுந்த நடவடிக்கை எடுக்கப்படும்.

கல்கி: மாங்காடு காமாட்சியம்மன் கோயில் வழிக்காக, முன்பிருந்த நூலகக்

கட்டடத்தை இடித்திருக்கிறார்கள். இடிக்கும் போது, வேறு இடத்தில் நூலகக் கட்டடம் கட்டித் தரப்படும் என்று கோயில் நிர்வாகம் கூறியிருந்தும் இன்னும் கட்டப்பட வில்லை.

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: மாங்காடு, ஏராளமான பக்தர்கள் வரும் ஒரு தலமாக இருந்தும் அங்கு, ஒரு பேருந்து நிலையம் இல்லையே?

கலெக்டர்: மாங்காடு பேரூராட்சியின் நிதி நிலை பேருந்து நிலையம் அமைக்கும் அளவுக்கு இல்லாததால், சென்னை பெரு நகர் வளர்ச்சிக் குழும அபிவிருத்திக் கட்டண நிதியிலிருந்து ஐந்து லட்சம் ரூபாய் கடனாகப் பெற்றுப் பேருந்து நிலையம் அமைக்க ஒப்புதல் பெறப்பட்டுள்ளது. ஆயினும் பேருந்து நிலையம் அமைக்கப் பேரூராட்சிக்குச் சொந்தமான நிலம் இல்லை. அதனால் ஆலய நிர்வாகத்திடம் கோரப்பட்டுள்ளது.

கல்கி: அம்பத்தூர் — பாடியிலுள்ள டி. எம். பி. நகரில் ஒரு தாய் — சேய் நல விடுதி கட்டப்பட்டு இன்னும் திறக்கப்படாமல் உள்ளது.

கலெக்டர்: ஆவன செய்கிறேன்.

கல்கி: திருவொற்றியூரில் ஆங்காங்கே சாக்கடை நீர் தேங்கி நிற்பதால், குடிநீர்க் கிணறுகள் பாதிக்கப்படுவதாகச் சொல்கிறார்கள். மேலும் ஆடு, மாடுகளை வெட்டுவதற்கென்று தனி இடம் இல்லாததால் தெருவிலேயே வெட்டப்படுகிறது. அதனாலும் சுகாதாரக் கேடு விளைகிறது என்கிறார்கள்.

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: பரங்கிமலை ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த வேங்கைவாசல் ஊராட்சித் தலைவர், செய்யாத செலவுகளையெல்லாம் ஊராட்சியில் செய்ததாகக் கணக்கெழுதுவதாகச் சொல்கிறார்கள். உதாரணமாக, பேருந்து செல்வதற்குச் சாலையில் இடைஞ்சலாக இருந்த வேலிக்காத்தான் முட்செடிகளை அந்தந்த இடத்தின் சொந்தக்காரர்களே வெட்டிச் சரி செய்துவிட்ட போதிலும் அதற்கு ஊராட்சியிலிருந்து 1,400 ரூபாய் செலவு செய்யப்பட்டதாகவும், அதேபோல் கடந்த 86 இல் சென்னை இராணிமேரி கல்லூரி மாணவிகள் என். எஸ். எஸ். கேம்ப் வந்தபோது, அவர்கள் வசதிக்காகப் பள்ளித் திடலில் ஒரு லாரி ஆற்று மணல் கொண்டு வந்து கொட்டியதற்காகவும், சுமார் நானூறு தென்னங்கீற்றுகளைக் கொண்டு சிறுநீர்க் கழிப்பிட மறைவு கட்டியதற்காகவும் ஏழாயிரம் ரூபாய் கணக்கெழுதியுள்ளதாகவும் சொல்கிறார்கள். இதுபோல் சுமார் மூன்றரை லட்ச ரூபாய்க்குத் தவறான கணக்குள்ளதாகச் சொல்கிறார்கள்.* இதே மாதிரி, காஞ்சி அருகிலுள்ள திருப்புக்குழி பஞ்சாயத்தின் முன்னாள் தலைவர் 24,024.13 ரூபாய்க்குச் சரியான கணக்குக் காட்டவில்லை என்று கடந்த 19.11.84 இல் காஞ்சிக் கோட்ட வளர்ச்சி அலுவலர் எஸ். டி. நடராசு என்பவர் உறுதிப்படுத்தியிருந்தும் மேல் நடவடிக்கை ஏதும் இல்லை என்று சொல்கிறார்கள். இவற்றையெல்லாம் நீங்கள் விசாரித்து உண்மையைக் கண்டறிய வேண்டும்.

கலெக்டர்: நீங்கள் எங்கள் மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்து விட்டு என்னைச் சந்திக்க வருகிறீர்கள் என்றதும், நீங்கள் மாவட்ட வளர்ச்சிக்கான ஆலோசனைகளைத்தான் கூறப் போகிறீர்கள் என்று நினைத்திருந்தேனே தவிர, இதுமாதிரி கேள்விகளை நான் எதிர்பார்க்கவில்லை. அதற்காக நான் குறைகளைக் கூறக் கூடாது என்று சொல்லவில்லை. இதை நீங்கள் முன்பே சொல்லியிருந்தால், சம்பந்தப்பட்டவர்கள் அனைவரையும் பதில்களோடு வரச் சொல்லியிருப்பேன். அதனால் பேட்டியை இன்னொரு நாள் வைத்துக் கொள்ளலாமா?

# "நான் எதிர்பார்க்கவில்லை!"

கல்கி: நாங்கள் அதற்கும் தயாராகவே இருக்கிறோம். நீங்களே ஒரு தேதி சொல்லுங்கள். அப்போது வருகிறோம்.

கலெக்டர்: இல்லையில்லை. நீங்களே ஒரு தேதி சொல்லுங்கள்.

கல்கி: உங்களுக்கு வசதியான தேதியில் வர நாங்கள் தயார். அதனால் நீங்களே சொல்லுங்கள்.

கலெக்டர்: சரி, அடுத்த கேள்விக்கு வாருங்கள்.

கல்கி: குரோம்பேட்டை அரசு மருத்துவமனைக்குக் காம்பவுண்டுச் சுவர் இல்லாததால், மருத்துவமனைக்குள் பன்றிகளின் நடமாட்டம் அதிகமாக இருக்கிறது.

கலெக்டர்: காம்பவுண்டுச் சுவர் தொடர்பாக 83 லேயே மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. தற்போது புதிய மதிப்பீடு செய்யப்பட்டு நடவடிக்கையும் எடுக்கப்பட்டு வருகிறது.

கல்கி: குரோம்பேட்டை ஜி. எஸ். டி. ரோடில் சுடுகாட்டை ஒட்டியே பெட்ரோல்

---

* வேங்கைவாசல் ஊராட்சித் தலைவர், மேல் கூறப்பட்ட பதினாறு குற்றச்சாட்டுகளுக்கும் பதில் கூறுமாறு அவருக்கு நாம் தபாலில் அனுப்பிய போது, அவர் ஒட்டுமொத்தமாக அனைத்துக் குற்றச்சாட்டுகளும் பொய்யானவை என்று நமக்கு எழுதியுள்ளார்.



* கலெக்டர் பேட்டியின்போது உடனிருந்த அலுவலர்களில் ஒரு பகுதியினர்...

பங்க் ஒன்று உள்ளது. இது விபத்துக்கு வழி வகுக்காதா? எப்படி பெட்ரோல் பங்குக்கு அனுமதி வழங்கப்பட்டது?

கலெக்டர்: ஜி. எஸ். டி. ரோடில் நிறைய ஆக்கிரமிப்புகள். அகற்றினால் மறுபடியும் ஆக்கிரமிக்கிறார்கள். குறைகள் மக்களிடமும் இருக்கிறது. மக்கள் ஒத்துழைக்காத வரை ஏதும் செய்ய முடியாது... (இச்சமயத்தில் டெலிபோன் வரவே, கலெக்டர் பேசுகிறார்.).... காஞ்சி சங்கரமடத்திற்கு ஆந்திர கவர்னர் குமுத்பென் ஜோஷி அவர்கள் வந்திருக்கிறார். அவரை வரவேற்க நான் செல்ல வேண்டும். நான் இல்லாவிட்டாலும் தொடர்ந்து உங்கள் கேள்விகளைச் சொல்லுங்கள். மற்ற அதிகாரிகள் குறித்துக் கொள்வார்கள்; பதிலளிப்பார்கள். நன்றி. நான் வருகிறேன். முடிந்தால் நான் மறுபடியும் வந்து கலந்து கொள்கிறேன். (கலெக்டர் புறப்பட, மற்ற அதிகாரிகளுடன் பேட்டி மீண்டும் தொடர்கிறது.)

கல்கி: பல்லாவரம் நகராட்சித் தலைவரைச் சந்தித்தபோது, நகராட்சிக்கென்று குப்பை கூளங்களைக் கொட்டுவதற்கு ஓர் இடம் இல்லையென்றும். மேலும் தங்கள் நகராட்சி எல்லை கூடத் தங்களுக்கு இன்னும் தெரியாதென்றும் காரணம், வருவாய்த் துறையினர் இன்னமும் சர்வே செய்யாதது தான் என்றும் சொன்னார்!

கலெக்டரின் உதவியாளரும் மற்றும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளும்: இந்த விஷயத்தை அவர் எங்களிடம் வந்து சொல்லியிருந்தால் ஆவன செய்திருப்போமே! குறித்துக் கொள்கிறோம்.

கல்கி: மதுராந்தகம் அருகிலுள்ள ஆலப்பாக்கம் கிராமத்தில் கடந்த 21.5.87 அன்று வழங்கப்பட்ட வெள்ள நிவாரணத் தொகையில் இருபத்தைந்து பேருக்கு ஒரு பைசாக் கூடப் போய்ச் சேராத நிலையிலும் அவர்களுக்கு வழங்கப்பட்டதாகக் கணக்கெழுதப் பட்டுள்ளது. மேலும் ஐம்பத்தாறு பேருக்கு ஒதுக்கப்பட்ட தொகை கொடுக்கப்படாமல் தலா ஐந்நூறு ரூபாய் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது என்றும் புகார்.

அதிகாரிகள்: (குறித்துக் கொள்கிறார்கள்.)

கல்கி: பொன்விளைந்த களத்தூரிலுள்ள அரசினர் உயர்நிலைப்பள்ளியின் தரம் ஆண்டுதோறும் குறைந்துகொண்டே வருவதற்கு என்ன காரணம்?

பள்ளிக் கல்வித்துறை அலுவலர்: பின் தங்கிய இடமாதலாலும், மாணவர்களின் பெற்றோர் படித்தவர்களாக அமையாததாலும்தான் இந்நிலை. எனினும் இந்நிலை அகலத் தக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

கல்கி: வாலாஜா பாத் ஊராட்சியிலுள்ள நத்தா நல்லூர் கிராமத்தில் இயங்கும் ஊராட்சி ஒன்றியப் பள்ளிக்குப் போதுமான கட்டட வசதி இல்லை என்று புகார். இது போலவே இடைக்கழி நாட்டிலுள்ள தழுதாளிக் குப்பத்தில் இயங்கும் துவக்கப் பள்ளியில் இரண்டு ஆசிரியர்களுக்கு ஒரு நாற்காலி தான் என்ற நிலை. கட்டட வசதி பற்றிச் சொல்லவே தேவையில்லை!

பள்ளிக் கல்வித்துறை அலுவலர்: செங்கை மாவட்டப் பள்ளிச் சீரமைப்பு மாநாடு சிறப்பாக நடந்ததன் விளைவாகக் கிராம மக்களின் நன்கொடைகள் மூலம் பள்ளிகளுக்குத் தேவையான பொருள்களை வாங்கித்தர நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. முடிந்தவரை கட்டட வசதிகளுக்கும் நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

கல்கி: இடைக்கழி நாட்டைச் சேர்ந்த மொத்தமுள்ள 24½ கிராமங்களுக்கும் இருப்பது கடப்பாக்கத்திலுள்ள ஒரேயொரு மருந்தகம்தான். அப்படியிருந்தும் அங்கு போதுமான மருந்துகள் இருப்பதில்லை என்று புகார்.

கலெக்டரின் உதவியாளர்: குறித்துக் கொள்கிறார்.

கல்கி: மதுராந்தகம் அருகிலுள்ள சிறுநகர் பால் உற்பத்தியாளர் கூட்டுறவுச் சங்க உறுப்பினர்களுக்குக் கடன் வசதி கிடைக்கவில்லை என்கிறார்கள்.

பால்வள மேம்பாட்டுத் துறை அலுவலர்: அங்கிருந்து எங்களுக்கு இதுவரை எந்த் விண்ணப்பமும் வரவில்லை. 87 — 88 நிதியாண்டில்மான் யம்கோரிவரும்விண்ணப்பங்களைப் பரிசீலித்து ஆவன செய்கிறோம்.

கல்கி: மேலும் அவ்லூரில் சரியான பஸ் வசதி இல்லை. 81—K பஸ்ஸை அவ்லூர் வழியாகத் திருப்பினால் வசதியாக இருக்கும் என்கிறார்கள்.

போக்குவரத்துத் துறை அலுவலர்: உடனடியாக நடவடிக்கை எடுக்கப்படும்.

கல்கி: செங்கல்பட்டு சுடுகாட்டில் ஒரு பிணத்தை எரிக்க நானூறு ஐந்நூறு என்று வாங்குகிறார்களாம்., நகராட்சியே கட்டணத்தை நிர்ணயம் செய்யலாமே?

க. உதவியாளர்: (குறித்துக் கொள்கிறார்.)

கல்கி: பாலாற்றங்கரையிலுள்ள சாராயத் தொழிற்சாலைக் கழிவு நீர்ச் சுத்திகரிப்புக்கு ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதா?

க. உதவியாளர்: கழிவுநீர்ச் சுத்திகரிப்பு

# UMS

## பூஸ்டர்/ஆன்டெனா



**உயர்ந்த திறன்**
**அதிக சக்தி**
**மிகத் துல்லியமான படங்கள்**



- ★ உங்கள் டிவி சிக்னல்களுக்கு மிகுந்த வலிமையைத் தருகிறது.
- ★ கொடைக்கானல்/சேனல் 7 ஒளிபரப்பிற்கு சிறந்த பலன் அளிக்கிறது.
- ★ தொலை தூரப்பகுதிகளிலும் தெளிவான வண்ணங்களையும் துல்லியமான படங்களையும் தருகிறது.
- ★ கடும் காற்றிலும் மழையாலும் பாதிக்கப் படாத வகையில் உறுதியாக அமைக்கப் பட்டது.
- ★ சிகரில்லா தரத்திற்காக மிகச் சிறந்த பாகங்கள் உபயோகப்படுத்தப்படுகின்றன.





**UMS** ரேடியோ ஃபேக்டரி (பி) லிமிடெட்

கிளைகள் :

- ● 102, ரெஸிடென்ஸி ரோடு, பெங்களூர்-560 025 போன் : 578329
- ● [illegible]/229, கோயம்புத்தூர் ரோடு, கல்மண்டபம், பாலக்காடு-678 001, ஃபோன் : 5362/6942
- ● 165, க்ரீம்ஸ் லேன், க்ரீம்ஸ் ரோடு பி.ஓ. சென்னை-600 006, ஃபோன் : 473339.

SASI/UMS/ 5/87

இயந்திரங்கள் நிறுவும் வேலை நடந்து கொண்டிருக்கிறது.

கல்கி: செங்கல்பட்டு அருகில் உள்ள பாலாற்றில் ஒரு தரைப் பாலம் அமைத்தால் ஆற்றுக்கு அக்கரையிலுள்ள பல்வேறு கிராம மக்கள் ஆறு கி. மீ. தூரத்திலேயே செங்கல்பட்டுக்கு வந்து விடலாம். தரைப் பாலம் இல்லாததால் சுமார் இருபத்தைந்து கி. மீ. வரை சுற்றிக் கொண்டு வருகிறார்கள்.

க. உதவியாளர்: (குறித்துக் கொள்கிறார்).

கல்கி: செங்கல்பட்டு பேருந்து நிலையம் கட்டி முடிக்கப்பட்டும் ஏன் திறக்கப்படவில்லை?

க. உதவியாளர்: (குறித்துக் கொள்கிறார்)

கல்கி: குன்றத்தூரில் பால்வாடிக் கட்டடம் ஒன்று முக்கால்வாசி கட்டப்பட்ட நிலையில், அப்படியே இருக்கிறது.

க. உதவியாளர்: (குறித்துக் கொள்கிறார்.)

கல்கி: தேசுமுகிப் பேட்டையிலுள்ள குப்பன் என்பவர் கோடி விநாயகர் குளத்தில் கடந்த மூன்றாண்டுகளாக மீன் வளர்த்து வருகிறார். கடந்த 7.5.87 இல் சில விஷமிகள் பலாத்காரமாக மீன்களைப் பிடித்துச் சென்று விட்டனராம். அதுபற்றிப் புகார் கொடுத்தும் பயனில்லை என்கிறார்.

க. உதவியாளர்: (குறித்துக் கொள்கிறார்.)

கல்கி: ஆவடியிலுள்ள ராமலிங்கபுரம் பூங்காநிலம் அ. தி. மு. க. உறுப்பினர் ஒருவராலேயே ஆக்கிரமிக்கப்பட்டுள்ளதென்றும் அதேபோல், பள்ளி நிலங்களும் கட்சிக்காரர்களால் ஆக்கிரமிக்கப்பட்டுள்ளதென்றும் சொல்கிறார்கள்.

ஆவடி நகரிய அலுவலர்: இராமலிங்கபுரம் பூங்கா நிலத்தை சையத் இப்ராஹிம் என்பவர் ஆக்கிரமித்ததை அடுத்து, வழக்கும் நடந்தது. அது நகரியத்திற்குச் சொந்தமான இடமாக இல்லாததால் வழக்கு அவருக்கே சாதகமாகி விட்டது. இதுகுறித்து மாவட்ட நீதிமன்றத்தில் அப்பீல் செய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. மேலும் ஆவடி நகரியத்திலுள்ள பருத்திப்பட்டு கிராமத்தில் உள்ள அரசு புறம்போக்கு நிலத்தில் பெண்கள் உயர்நிலைப் பள்ளி நடந்து வருகிறது. அந்நிலத்தில் பொது மக்கள் ஆக்கிரமிப்புச் செய்துள்ளார்கள். எனினும், அது அரசுக்குச் சொந்தமான நிலமாதலால் நகரியம் ஏதும் செய்ய இயலாது.

கல்கி: நகரியப் பகுதி மக்களுக்குக் குடும்ப அட்டை ஒன்றுக்கு ஆறு லிட்டர் வீதம் மண்ணெண்ணெய் வழங்க வேண்டும். எனினும் மறைமலை நகர் நகரியத்தில் மூன்று லிட்டர்கள்தான் வழங்கப்படுகிறதாமே?

மாவட்ட வழங்கல் அதிகாரி: பொத்தேரி, காட்டாங்குளத்தூர், நின்னகரை, பேரமனூர், கணிவந்தப்பட்டு, திருக்கச்சியூர், செங்குன்றம், ஆகிய கிராமங்களை இணைத்து மறைமலை நகர் நகரியம் உருவாக்கப்பட்டுள்ளது. அங்குள்ள குடும்ப அட்டைகள், வழங்கப்படும் பொருள்களின் அளவுகள் ஆகிய விவரங்களைச் செங்கல்பட்டு வட்டாட்சியரிடம் கோரியுள்ளோம். அது வந்ததும் குறிப்பிட்ட அளவு வழங்கப்படும்.

கல்கி: சென்னை எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலைக்காக 360 ஏக்கர் விவசாய நிலங்களை ஆர்ஜிதம் செய்தார்கள். அப்போது பாதிக்கப்பட்ட குடும்பங்களில் ஒருவருக்கு அதில் வேலை வாய்ப்புத் தருவதாக உறுதியளிக்கப்பட்டிருந்தும், பாதிக்கப்பட்ட ஐம்பத்து மூன்று குடும்பங்களில் இன்னும் இருபத்தைந்து பேருக்கு வேலை வாய்ப்புத் தரப்படவில்லையாமே?

க. உதவியாளர்: (குறித்துக் கொள்கிறார்.)

கல்கி: திருநின்றவூரைச் சேர்ந்த பலராமன் என்பவர் சுயவேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் மாவட்டத் தொழில் மையத்திற்கு மனுச் செய்து, 15,000 ரூபாய் கடன் அனுமதிக்கப்பட்டும், தம்பி, அப்பா ஆகியோரின் வருமானம் ஆயிரத்திற்கு மேல் இருப்பதைக் காரணம் காட்டிக் கடன் மறுக்கப்பட்டு விட்டதாம். இவரோ திருமணமாகித் தனிக் குடும்பம் நடத்துபவர். அப்பா, தம்பியின் வருமானத்தைக் காட்டி இவருக்குக் கடன் தர மறுப்பது எப்படி நியாயம்?

க. உதவியாளர்: அவருக்கு உடனடியாகக் கடன் வழங்க ஏற்பாடு செய்யப்படும்.

கல்கி: காஞ்சிபுரம் கைலாசநாதர் கோயில் சிற்பங்கள் வெளிநாட்டுப் பயணிகளைக் கவர்பவை. அப்படியிருந்தும் அக்கோயிலுக்குச் சரியான சாலை வசதி இல்லையே?

காஞ்சி நகராட்சி அலுவலர்: அக்கோயிலுக்குச் செல்லும் சாலையைத் தார்ச் சாலையாக்க 50,000 ரூபாய்க்கு மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. அரசின் அனுமதியும் கடனும் எதிர்நோக்கப்படுகிறது.

கல்கி: இங்குள்ள கலெக்டர் அலுவலக வளாகத்திற்குள்தான் மற்ற பல அரசு அலுவலகங்களும் உள்ளன. அப்படியிருந்தும் வெளியில் கலெக்டர் அலுவலகத்திற்கான போர்டு மட்டும்தான் உள்ளது. மற்ற அலுவலகங்கள் பற்றிய போர்டுகளையும் வைக்கலாமே?

க. உதவியாளர்: உடனடியாக வைக்க ஆவன செய்கிறோம்.

(இங்கே இடம் பெறாத இன்னும் பல்வேறு பிரச்னைகள் பற்றியும் எடுத்துச் சொன்னோம். அவற்றையும் கலெக்டரின் உதவியாளர் குறித்துக் கொண்டுள்ளார். எல்லாவற்றையும் கலெக்டரின் கவனத்திற்குக் கொண்டு சென்று நடவடிக்கை எடுக்க ஆவன செய்வதாகவும் உறுதியளித்தார்.)

* மு. செந்தில்வாசன், திருமருகல்.

? 'பாரத விடுதலை முன்னணி' என்ற பெயரில் புதிய கட்சி ஆரம்பித்துள்ள ஜெத்மலானி பற்றி?

! ஏராளமான எதிர்க்கட்சிகள்தான் நமது ஜனநாயகத்தின் சாபக் கேடு என்பதை மற்றவர் புரிந்து கொள்ளாது போனால் ஆச்சரியமில்லை... ஜெத் மலானியுமா!

* இ. நாகராஜன், விருத்தாசலம்.

? ராஜஸ்தானில் உடன்கட்டை ஏறும் வழக்கம் இன்னும் நடைமுறையில் இருப்பது குறித்து?

! அந்த அளவுக்கு அறியாமையைப் பாதுகாத்து வந்திருக்கின்றன நமது மத்திய மாநில அரசுகள் என்று அர்த்தம். இது போன்ற அநாகரிகங்களுக்கு அறியாமையே அடிப்படைக் காரணம். நாட்டுக்கே தலைகுனிவை ஏற்படுத்திய இந்நிகழ்ச்சி மீண்டும் தலையெடுக்காமல் அழிந்து ஒழிந்து போகட்டும்.

# வன்னியர் போராட்டம் வன்முறையில் முடிந்திருக்கிறதே?

* எஸ். வி. ராஜசேகர், சென்னை — 5.

? ராபின் மெய்ன் வழக்கு மீண்டும் உயிர் பெற ஆரம்பித்திருப்பது பற்றி...?

! அவர் ஏதோ வங்கி மோசடி 'மட்டும்' தான் செய்தார் என்று எண்ணியிருந்தோம். ஆனால் அவரோ 'இல்லாடி சக்கரவர்த்தி' என்ற பட்டத்துக்கே உரியவராகிறார்! எத்தனை விதமாக ஊரை ஏமாற்றுகிறார் மனுஷன் என்று பார்த்தால் வியப்பாக இருக்கிறது. பெரிய இடத்துத் தொடர்புகள் அவருக்குத் துணை செய்திருப்பதைப் பார்த்தால் வேதனையாகவும் உள்ளது.

* அர. மணிவண்ணன், சென்னை — 16.*

? சர்க்காரியா தீர்ப்பின் மீது மேல் நடவடிக்கை எடுக்குமாறு மத்திய அரசைக் கேட்டுக் கொள்ளும் ஜெயலலிதாவுக்கு அமிதாப் — அஜிதாப் மீது மேல் நடவடிக்கை எடுக்குமாறு கோர தைரியம் ஏன் வரவில்லை?

! அப்புறம், 'எஸ். டி. எஸ். சமர்ப்பித்த ஊழல் பட்டியல் மீது நடவடிக்கை எடுக்கிறேன்' என்று ராஜீவ் ஆரம்பித்து விட்டால் என்ன செய்வது? — அதனால்தான்!

* ஏ. பாலச்சந்திரன், கே. வி. குப்பம்.

? பஞ்சாப் தீவிரவாதிகளுக்கு நேரடியாக ஆதரவு அளித்துள்ள நான்கு சீக்கியத் தலைமை குருமார்களும் கைது செய்யப்படுவார்களா?

! அதற்கு மத்திய அரசுக்குத் தைரியம் வருமா என்பது ஒருபுறமிருக்க, அப்படிச் செய்வதால் பகைமை வளரவே செய்யும். பஞ்சாப் பிரச்னைக்குத் தீர்வு அடக்கு முறையில் அல்ல. அடக்குமுறை மூலம் காலிஸ்தானில் நம்பிக்கை இல்லாத மக்களையும் அத்திசையில் திருப்பி விட்டுக் கொண்டிருக்கிறது மத்திய அரசு. மிதவாதிகளை மதித்து ஆட்சியை அவர்களிடம் ஒப்படைத்து அவர்கள் மூலம் தீவிரவாதிகளைச் சமாளிப்பதே வழி.

* டி. சீனிவாசன், சென்னை.

? தமிழக அரசு எந்த ஒரு பிரச்னையையும் தீர்க்க முடியாமல் திணறிக் கொண்டிருப்பது ஏன்?

! மத்திய அரசு மட்டும் தீர்த்து வைக்கிறதாக்கும்! மத்திய அரசு முனைந்து, தவறான அணுகுமுறைகளால் தோல்வி காண்கிறது. தமிழக அரசிடமோ முயற்சியே இல்லை! சும்மா இருப்பதே சுகம் என்று காலத்தை ஓட்டுகிறது. இதுதான் வித்தியாசம்.

* ஆ. சாம்பசிவம், திருச்சி.

? வன்னியர் போராட்டம் வன்முறையில் முடிந்திருக்கிறதே?

! தமிழக அமைச்சரவையின் ராஜ தந்திரமற்ற போக்கைத்தான் இது உணர்த்துகிறது. எம். ஜி. ஆர். உடல்நலமின்றி அமெரிக்காவில் இருப்பதால் வன்னியர் தலைவர்களை அழைத்துப் பேசி, மிகச் சுலபமாக அவகாசம் கேட்டுப் பெற்றுத் தற்காலிகமாகச் சமாளித்திருக்கலாம். தவறி விட்டார்கள். மேலும் ராஜதந்திரமற்ற முறையில் எம். ஜி. ஆரின் பேச்சு ஒன்றின் ஒரு பகுதியை விளம்பரமாக நாளிதழ்களில் வெளியிட்டார்கள். அது வன்னியர் குலத்தவரின் நெஞ்சில் எரிந்த தீக்கு நெய் வார்த்தது போலாகி விட்டது. இட ஒதுக்கீடு என்ற தத்துவமே சுதந்திர நாட்டில் சம உரிமைத் தத்துவத்துக்கு முரணானது என்றாலும் சில பிரிவினருக்கு இட ஒதுக்கீடு சலுகைகள் காட்டப்படும்போது, வேறு பல பிரிவினரும் கோருவதைத் தடுக்க முடியாது.

* டி. தாமரை பிரபு, குடியாத்தம்.

? கருணாநிதியின் ஆதரவைப் பெற பிரபா

கரன் முயற்சி எடுப்பது எப்படி சார்?

! அந்தச் செய்தி உண்மையானுல் அது விஷ(ம)ம் ஸார்!

* எம். இராசன், மோரனபள்ளி.

? வி. பி. சிங்கின் கருத்துக்களில் உங்களுக்கு எத்தனை சதம் உடன்பாடு?

! நூறு சதம் உடன்பாடாக இருந்து வந்தது. இப்போது எதிர்க்கட்சிகளில் வலது சாரியுடன் இணைவதா, இடது சாரியுடன் இணைவதா, தனித்து நிற்பதா, காங்கிரஸையே கைப்பற்றுவதா என்று புரியாமல் அவர் தடுமாறுவதைக் காண, தொண்ணூறு சதமாகக் குறைந்து போய்விட்டது. மக்களுக்கு மறதி அதிகம் என்பதை மறக்காமல், அவர் சீக்கிரமாக ஒரு முடிவுக்கு வந்து, ஆளும் கட்சிக்குச் சவாலாக அமையக் கூடிய ஓர் உறுதியான மாற்றுத் திட்டத்தை அறிவிக்க வேண்டும்.

## நீங்கள் கேட்டவை — தராசு

வேதனையின் மறுபுறமாக, நர்ஸுகள் அவமானத்தில் குறுகி அடங்கி, நடந்ததை மூடி மறைக்காமல், வீறு கொண்டு எழுந்து அநீதிக்கு எதிராகப் போராடக் கிளம்பினர்களே, அது, பெருமிதத்தையும் நம்பிக்கையையும் உருவாக்குகிறது.

* மு. திருநாவுக்கரசு, மொரப்பூர்.

? போஃபார்ஸ் நிறுவன மானேஜிங் டைரக்டர் இந்தியா வந்திருக்கிறாரே?

! 'நீ அடிக்கிற மாதிரி அடி, நான் அழுகிற மாதிரி அழுகிறேன்; இரண்டு பேருமாகச் சேர்ந்து இந்திய மக்களின் கண் துடைத்து விட்டு நழுவலாம்' என்கிற திட்டமிட்ட நாடகம்தான் நடப்பதாகத் தோன்றுகிறது— இன்றுவரை.

* எஸ். பாபு, முத்தூர்.

? இந்தியா இலங்கை ஒப்பந்தத்தைத் தொடர்ந்து இலங்கையில் அமைதி நிலவுவதாக நாம் சொல்லிக் கொண்டிருக்கும் போது, மீண்டும் அங்கே சில சலசலப்புக்கள் எழுகின்றனவே?



* புதிய கட்சி!



துணிவு வருமா?



விஷமம்?



எத்தனை சதம்?

* இதயகீதா, நாட்டரசன்கோட்டை.

? இறப்பதற்கு நாம் ஏன் பயப்படுகிறோம்?

! 'மரணத்துக்குப் பின் என்ன' என்ற மர்மம் விடுவிக்கப்படாததுதான் காரணம். அந்தப் புதிர்தான் மனிதர்கள் மாக்களை விடக் கேவலமானவர்களாக ஆகி விடாமல் தடுத்தாட் கொண்டிருக்கிறது!

* எஸ். வெங்கடாசலம், நாட்டரசன் கோட்டை.

? மத்தியப்பிரதேச மாநிலத்தில் புதிதாகச் சேர்க்கப்படும் நர்ஸுகளுக்குக் கன்னித் தன்மை சோதனை நடந்ததாமே?

! இப்படி நடந்து கொண்டவர்களைக் கட்டி வைத்துச் சவுக்கால் வாங்கு வாங்கு என்று வாங்க வேண்டும் என்று கோபம் பொங்குகிறது. ஆனல் மனே விகாரம் கொண்ட வியாதியஸ்தராக இருந்தால் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் சேர்ப்பதே முறை.

! சம்பந்தப்பட்ட அனைவரையும்வளைத்துப் போடாமல் நேரடி சம்பந்தமில்லாதவர் செய்து கொண்ட ஒப்பந்தம் ஆதலால், ஒப்பந்தம் தங்கள் மீது திணிக்கப்பட்டதாகச் சிங்கள, தமிழ் தீவிரவாதிகள் கருதுவதில் வியப்பில்லை. என்றாலும் நடந்ததை மறந்து இன்றையச் சூழ்நிலையில் ஒப்பந்தத்தின் வெற்றிக்கு அனைவரும் பாடுபடுவதே புத்திசாலித்தனம்; இரு நாடுகளுக்கும் நல்லது. இல்லையேல் பின்விளைவுகள் பயங்கரமாயிருக்கும்.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

அர. மணிவண்ணன்,
25, அளகிரி நாயக்கன் தெரு,
ஆலந்தூர், சென்னை — 16.



# ஓட்டல், காரம், சிரிப்பு!

- வந்தவர்: இவ்வளவு டிப்ஸ் சேருதே, என்ன செய்வீங்க?

  சர்வர்: பக்கத்து ஹோட்டலுக்குப் போய்ப் பிடிச்ச டிபனைச் சாப்பிடுவேன்!

  — மீனம் தனுக, திருச்சி — 20.

- வந்தவர்: ஏங்க, வீட்டில்தான் மனைவியோட சண்டை. பொங்கல்ல உப்பைக் கொட்டிட்டான்னு இங்கே வந்தா, இங்கேயும் ஒரே உப்பா இருக்கே?

  ஹோட்டல் முதலாளி: ஹி... ஹி... சரக்கு மாஸ்டருக்கும் எனக்கும் கொஞ்சம் சண்டை...!

  — டி. சந்திரசேகர், சென்னை — 13.

- "அப்பா, சட்னியில் கரப்பான்..."

  "ச், அசடு! ஃபைவ் ஸ்டார் ஹோட்டலுக்கு வந்துவிட்டு அதையெல்லாம் பார்க்காதே. அப்புறம் நம்மைத் தப்பா நினைச்சுக்குவா!"

  — எஸ். அபிதா, சென்னை — 10.

- சர்வர் தம் மனைவியிடம்: என்னதான் நான் உன்னை வீட்டில் திட்டியிருந்தாலும், அதற்காக இங்கே இப்படி ஹோட்டலில் வந்து உட்கார்ந்து கொண்டு என்னிடமே ஆர்டர் பண்ணிக் கொண்டு வரச் சொல்வது நல்லாயில்லை!

  — ஜி. செந்திலரசு, சத்தி.

(ரூ. 200/— பரிசைப் பத்து வாசகர்கள் சமமாகப் பகிர்ந்து கொள்கின்றனர்.)

- "வீட்டுச் சாப்பாட்டுக்கும் ஓட்டல் சாப்பாட்டுக்கும் என்ன வித்தியாசம்?"

  "வீட்டிலே மாவாட்டிட்டுத்தான் சாப்பிடணும்; ஓட்டலிலே சாப்பிட்ட பின்னால் மாவாட்டினால் போதும்!"

  — தே. சங்கர், திருக்கோவிலூர்.

- சாப்பிட வந்தவர்: வடையில் 6321 என்று நெம்பர் போட்டிருக்கே!"

  சர்வர்: ஆமாம், விற்காத பழைய வடைகளை விற்கிற விசேஷ திட்டத்தின் கீழ். இந்த நம்பருக்குப் பரிசு விழுந்தாலும் விழும் சார்!

  — கே. சண்முகசுந்தரம், வெள்ளக்கோவில்.

- முதல் நண்பர்: நான்தான் பில்லுக்குப் பணம் கொடுப்பேன்.

  இரண்டாவது நண்பர்: ஊகூம், நான்தான் கொடுப்பேன்.

  மூன்றாவது நபர்: நீங்க ரெண்டு பேரும் சண்டை போட்டுக்கிட்டே கடைசியில் பில்லை என் தலையிலே கட்டிவிடாதீங்க!

  — இரா. கந்தையா, அம்பாசமுத்திரம்.

- கல்லாவில் இருப்பவர் சாப்பிட வந்தவரிடம்: இந்த ஹோட்டல் என் தாத்தா தொடங்கியது, தெரியுமா?

  சாப்பிட வந்தவர்: மைசூர் பாகைச் சாப்பிடும்போதே நினைத்தேன்.

  — ந. கிருட்டிணமூர்த்தி, பாலக்காடு.

- ஒருவர்: என்னய்யா இது! உன்னுடைய மேல் துண்டு சாம்பாரில் நனையறதே!

  சர்வர்: பரவாயில்லை சார்! என்னுடைய துண்டை எப்படியும் துவைக்கத்தான் போறேன்!

  — சாந்தா வெங்கடகிருட்டிணன், அலிகஞ்ச், லக்னோ.

- வந்தவர்: இந்தாப்பா சர்வர், ரெண்டு வடைகளை தூசி தட்டிக் கொண்டு வா.

  சர்வர்: என்ன சார், கிண்டலா இருக்கா?

  வந்தவர்: தப்புத்தான்! ஓட்டடை அடிச்சுக் கொண்டு வா!

  — க. தமிழ்ச்செல்வி, சிதம்பரம்



ராஜாஜி வாழ்க்கை வரலாறு -- IV

ராஜ்மோகன் காந்தி

8

# பதவி துறப்பதில் பெருமகிழ்ச்சி!

அதிகபட்சமாக எவ்வளவு நேரம் முடியுமோ அத்தனை நேரத்தை ராஜாஜியுடன் செலவிட்டார் நேரு. ''பாக்கியிருக்கும் கொஞ்ச நாட்களில் முடிந்தவரை உங்களுடன் இருந்து உங்கள் சொற்களால் பயனடைய விரும்புகிறோம்'' என்று ஒரு பொதுக் கூட்டத்திலேயே மேடையில் ஸி. ஆரைத் திரும்பிப் பார்த்துச் சொன்னார். பன்மையில் அவர் பேசினாலும் அது அவரது தனிப்பட்ட விருப்பத்தை வெளிப்படுத்திய சொற்களே.

பட்டேல், ஸி. ஆரிடம் சொன்னார்: ''ஜவாஹர்லால் எல்லாவற்றையும் கெடுத்து விட்டார். நான் சாகசமாகக் காரியத்தை முடிக்க எண்ணினேன். அவர் அவசரப்பட்டதில் எல்லாம் பாழாகிவிட்டது.'' ராஜாஜி பதில் கூறினார்: ''எதற்காக எனக்கு ஒரு விளக்கம் தருகிறீர்கள்? எனக்கு அந்தப் பதவியில் ஆர்வமே இல்லையே!''

ஸி. ஆருக்கும் பிரசாத்துக்கும் இடையில் எத்தனையோ ஆண்டுகளாக நிலவி வந்த அன்னியோன்னியம் இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு பாதிக்கப்பட்டதாகவே தெரியவில்லை.

மவுண்ட்பேட்டன் தம்பதிக்கு ஸி. ஆர். எழுதினார்: ''அரசியல் சாசனத்தில் ஒரு மகத்தான மாறுதல் ஏற்படும் போது அதனை நிர்வகிக்கும் ஆட்களிலும் சில மாறுதல்கள் ஏற்பட வேண்டும் என்ற விருப்பம் ஏற்படுவது இயல்பு. மற்ற பல கருதத்தக்க அம்சங்களை இது பின்னுக்குத் தள்ளிவிட்டதும் நியாயமே. மேலும், பின்னேறிச் செல்லும் அலை என்னைக் கரையில் ஒதுக்கிவிட்டுப் போவதை விட அலையின் சிகரத்தில் மிதக்கும் போதே எனக்கு ஓய்வு தரப்படுவது குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். எனது அருமைச் சகாக்கள் என்னிடம் காட்டிய அன்பும் வைத்த நம்பிக்கையும் எனது முதிர்ந்த பிராயத்தின் ஆண்டுகளை இனிக்கச் செய்தன. அந்த அன்பு சிறிதும் குறையாத நிலையில் நான் விடைபெறுகிறேன்.''

கடிதங்களும் செய்திகளும் வந்த வண்ணம் இருந்தன. அவை விடையளித்ததுடன் பாராட்டும் தெரிவித்தன. அவருடைய பதவிக் காலத்தை எடை போடவும் செய்தன. உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி கானியா, ''ஸி. ஆர்., எப்போதுமே எதிர்த் தரப்பின் வாதத்தை மதித்தார்'' என்பதைச் சுட்டிக் காட்டினார். ''எதிர்த் தரப்பினரும் நாட்டின் நலனைக் கருதித்தான் வாதாடுகிறார்கள் என்பதை ஏற்றுக் கொண்டவர் ஸி. ஆர்.'' என்றார். சுகாதார அமைச்சர் திருமதி அமிர்த் கௌர், ''கவர்னர் ஜெனரல் ராஜாஜியுடன் பணியாற்றியது எனக்கு உயர் கல்வி பெற்றது போலிருந்தது'' என்றார். இந்தியக் கடற்படையின் பிரதம தளபதியும் பிரிட்டிஷ்காரருமான அட்மிரல் பாரி, ''இந்தியாவின் அமரத்துவம் பெற்ற தொன்மையான பண்பாடுகளின் ஞானமெல்லாம் ஒன்று திரண்டு கவர்னர் ஜெனரல் மாளிகையில் ஸி. ஆரின் வடிவில் குடியிருந்தன'' என்று சொன்னார்.

அந்த உயர்ந்த பதவியை ஸி. ஆர். கண்ணியத்துடன் வகித்த பாங்கையும் எல்லோருடைய இதயங்களிலும் ஊடுருவிய அவருடைய எளிமையையும் போற்றாதவர் கிடையாது. ''நாட்டுக்காக எவ்வளவோ உழைத்துவிட்ட ராஜாஜியை ஓய்வு பெற வேண்டாம் என்று யார்தான் கூற முடியும்? ஆனால் அவர் ஓய்வுக் கால நாட்களை இடையூறின்றிக் கழிக்க அனுமதிக்கப்படுவாரா என்பது சந்தேகமே!'' என்று ஹிந்துஸ்தான் டைம்ஸ் பத்திரிகை தொலைநோக்குப் பார்வையுடன் எழுதியது.

ஸி. ஆர். மேஜை மீது ஒரு ஸ்படிக புத்தர் சிலை இருந்தது. அத்துடன் ஒரு வெள்ளித் தட்டும் இருந்தது. தட்டிலே அமைச்சரவை அங்கத்தினர்கள் அனைவரது பெயர்களும் பொறிக்கப்பட்டிருந்தன. அவை இரண்டும் அவர்களுடைய பரிசுகள். அவற்றுடன் வந்த நேருவின் கடிதம் அமைச்சரவைத் தீர்மானம் ஒன்றினை மேற்கோள் காட்டியது. அமைச்சரவைக்கு ஸி. ஆர். எவ்வளவு உதவியாக இருந்தார் என்பதை நன்றியோடு எண்ணிப் பார்த்த தீர்மானம், அது தொடர்ந்து, இந்தியாவின் கௌரவத்தை ஸி. ஆர். உயர்த்தியது மட்டுமல்ல; தமது

மக்களிடம் மேலும் நெருங்கி வந்து, அவர்களின் அன்புக்குரியவரானார் என்றும் அத்தீர்மானம் கூறியது. தப்து காரியாலய அறையில் தனியே அமர்ந்திருந்த ஸி. ஆர். உணர்ச்சி வசப்பட்டுப் போய்க் கண் கலங்கினார்.

பிரிவுபசார விருந்தின் போது நேரு சொன்னார்: "ஓர் அரண்மனை ஒரு குடிசையாக முடியும் என்றும் ஒரு குடிசை அரண்மனையாக முடியும் என்றும், மக்களுக்கு நீங்கள் உணர்த்தியிருக்கிறீர்கள். சேலம் ஜில்லாவில் ஒரு குக்கிராமத்தில் குடிசையில் வசிப்பதற்கும் வைஸ்ராய் மாளிகையில் வசிப்பதற்கும் இடையில் உங்களைப் பொருத்தமட்டில் எந்த விதமான வித்தியாசமும் இல்லை என்பதைத் தெளிவாக்கினீர்கள். கடந்த இருபது மாதங்களில் விதி நம்மை ஒன்று சேர்த்து வைத்திருந்தது. எனக்கு அடிக்கடி மனக்கலக்கம் ஏற்படும் போதெல்லாம் உங்களிடம் வந்து யோசனை கேட்பேன்; நீங்கள் எப்போதும் எனக்கு உதவினீர்கள். எனவே, இப்போது நீங்கள் இங்கிருந்து போக வேண்டிய நேரம் வந்து விட்டதால், என்னிடத்தில் ஒரு சிறிய வெற்றிடம் உருவாகியிருக்கிறது. ஒரு குறை, ஒரு வருத்தம், ஓர் ஏக்கம் — எனக்கு மிகவும் அவசியமாகத் தேவைப்படும் நேரத்தில் உங்கள் அறிவுரை கிடைக்காமல் போய் விடுமோ என்ற ஒரு கவலை எனக்கு ஏற்பட்டிருக்கிறது."

ஸி. ஆர். தமது பதிலில் கூறினார்: "உண்மையானது, சில சமயங்களில் திடீரென்று ஆழ்ந்த நம்பிக்கையுடன் நம் இதயங்களில் உதயமாகிறது. வாழ்க்கையில் அடையக் கூடிய மிகப் பெரிய மகிழ்ச்சி ஒரு விஷயத்தைத் துறந்துவிட்டுச் செல்வதில்தான் இருக்கிறது என்பதை நான் இப்போது உணர்கிறேன். பிரதமர் தமது உணர்ச்சிகளுக்குச் சொல் வடிவம் தந்ததை நீங்கள் கேட்டீர்கள். அதை விடச் சிறந்த சன்மானம் எனக்கு வேறு என்ன இருக்க முடியும்? இன்று பிற்பகலில் அமைச்சரவை எனக்கு அனுப்பி வைத்த கடிதத்தைக் காட்டிலும் விலையுயர்ந்ததாக எந்தப் பொருளை நான் எனது உடைமையாக்கிக் கொள்ள முடியும்! எனவே, எனது அருமை நண்பரான பிரதம மந்திரியே, எனது உள்ளத்தில் அளப்பரிய மகிழ்ச்சியுடன் நான் போகிறேன்."

குடியரசு பிறப்பதை அறிவிக்கும் பெருமை ஸி. ஆருக்குக் கிடைத்தது. ஜனவரி 26 ஆம் தேதி காலை வைஸ்ராய் மாளிகையின் தர்பார் கூடத்தில் சிம்மாசனத்தில் சில விநாடிகள் அமர்ந்து எழுந்த ஸி. ஆர்., இந்தியா குடியரசானதைத் தெரிவிக்கும் அறிக்கையைத் தெளிவான குரலில் படித்தார். பிறகு ஜனாதிபதியாக விளங்கப்போகிறவரைச் சிம்மாசனத்தின் அருகே அழைத்து அமரக் கோரினார். ராஜன் பாபு அவ்வாறே செய்ய, அவரைவிட ஐந்துவயது மூத்தவரான ஸி. ஆர். அவரது தோள்களை ஆசி வழங்கும் பாவனையில் தட்டிக் கொடுத்தார். பிரசாத் பதவிப் பிரமாணம் மேற்கொண்டார்.

சடங்குகள் இத்துடன் முடிந்துவிடவில்லை. ஸி. ஆர். சென்னை திரும்புவதைக் கோலாகலமாக்க வேண்டும் என்று நேரு தீர்மானித்தார். வைஸ்ராய் மாளிகையின் பிரும்மாண்டமான வாசல் படிகளுக்கு முன்னால் ராணுவ மரியாதையை ஸி. ஆர். ஏற்றார். அங்கிருந்து ஆறு குதிரைகள் பூட்டிய சாரட்டில் மாளிகையின் வெளி வாசல் வரை பவனி வந்தார். பின்னர் விமான நிலையம் வரை திறந்த மோட்டார் காரில் சென்றார். இப்போது ராஷ்டிரபதி மாளிகை என்று பெயர் மாற்றம் பெற்றுவிட்ட வைஸ்ராய் அரண்மனையின் வாசலில் பெரும் கூட்டம் திரண்டு நின்று வாழ்த்தொலிகளை எழுப்பியது. விமான நிலையத்திலும் அப்படியே. அங்கு முப்படைகளின் அணிவகுப்பு மரியாதையை ஏற்றார் ஸி. ஆர்.

விமானத்தில் ஏறி நடக்க ஆரம்பிப்பதற்கு முன் கடைசியாகப் பிரசாத்தை ஆலிங்கனம் செய்து கொண்டார் ஸி. ஆர். அவர் கழுத்தில் தேசியக் கொடியின் நிறங்களில் அமைந்த கதர் மாலையை அணிவித்தார். ஸி. ஆர்., நாமகிரி ஆகியோருடன் விமானம் வரை உடன் நடந்து வந்தார் ஜவாஹர்லால். படிகளில் ஏறிய ஸி. ஆர்., உச்சியில் நின்று திரும்பிப் பார்த்தார்; கரம் அசைத்தார், உடனே மறைந்தார்.

விமானம் சென்னை நோக்கிப் பறக்க, ஸி. ஆர்., ராஜேந்திர பிரசாத்துக்குக் கடிதம் எழுதினார். "சிறு மாறுதல் மிக அழகான முறையில் ஏற்பட்டதனால் என் மனம் ஆனந்தத்தில் திளைக்கிறது. அதன் அழகைக் குலைக்கும் விதமாக எதுவுமே நடக்கவில்லை. உங்கள் அனைவருக்கும் கடவுள் அருள் பாலிப்பாராக" என்று கடிதத்தை முடித்தார்.

பின் குறிப்பு ஒன்றும் இருந்தது: "இக்கடிதத்தை ஜவாஹர்லாலுக்கும் வல்லபபாய்க்கும் காட்டவும். அவர்களுக்குத் தனியே நான் எழுதவில்லை."

ஜவாஹர்லாலுக்குக் கடிதம் எழுதுவதே ஸி. ஆருக்கு இயல்பாக இருந்திருக்கும். ஆனால், மாஜி கவர்னர் ஜெனரல், ஜனாதிபதிக்கு எழுதுவதே முறை. உயர் பதவிகளின் சம்பிரதாய மரபுகளையும் கடமைகளையும் ஸி. ஆர். அறியாதவரல்லவே.

சென்னை விமான நிலையத்தில் ஆளுனர் பவநகர் மகாராஜா, முதலமைச்சர் குமாரசாமி ராஜா உள்பட ஆயிரக்கணக்கானோர் திரண்டிருந்து வரவேற்பு அளித்தனர். பீரங்கிகள் முப்பத்தொரு முறை முழங்கின.

சந்தோஷ ஆரவாரங்களுக்கிடையில் ஒரு விம்மல் ஒலியையும் பத்திரிகை நிருபர்கள் கேட்டு விட்டனர். அழுதவர், ஒய்வு பெறும் கவர்னர் ஜெனரலின் அந்தரங்கப் பணியாளர் காதிர் பக்ஷ். அவர் ஸி. ஆருக்கு உதவியாக விமானத்தில் சென்னைக்கு வந்திருந்தார். அதே விமானத்தில் தில்லி திரும்பவிருந்தார்.

(தொடரும்)

## 1. கொலைகளுள் பெரிய கொலை எது?

ஐந்து இந்திரியங்கள் மூலமாக உடலைப் பற்றிய உணர்வைப் பெறுவானாகில் தேகாத்மா புத்தியை வளர்த்து ஆன்மீக உணர்ச்சியை அழிக்கின்றான். ஆன்மீக உணர்ச்சியை அழிப்பது கொலைகளுள் பெரிய கொலை ஆகும்.

## 2. அசைவன் யார்?

ஐந்து இந்திரியங்கள் மூலமாக மனிதன் இறை பெறுவானாகில் அவன் தன்னைச் சிவ நிலைக்கு உயர்த்துகின்றான். **எனவே அவன் சைவனாகின்றான்.**

ஐந்து இந்திரியங்கள் மூலமாக உடல் உணர்வை **வளர்பபவன் அசைவனாகின்றான்.**

## 3. இந்துக்கள் பல தெய்வங்களை வணங்குகின்றார்கள் ஏன்?

மனதுக்கு வழிபாடு மிகவும் அவசியம். வழிபாட்டின், மூலம்தான் மனதை சரிபடுத்த முடியும். மனதின் பாங்குக்கு ஏற்பப் பல வடிவங்களின் கடவுள் வழிபாடுக்கு இருப்பதுதான் பொருந்தும். (தர்ம சக்கரம்.)

## வட்டமேஜை

# ஊனம் உனக்கல்ல சகோதரி!

* சகோதரி
சசிகலா...

எல்லா உறுப்புகளும்
எழிலுடனிருந்தும்
இதயத்தை மட்டும்
இருட்டாக வைத்திருப்போர்க்கு,
உன்
காலெழுத்தாவது
கண்களைத் திறக்கட்டும்...

நீ
எழுதுவது
காலாலல்ல;
கை யால்!
ஆம்;
நம்பிக்'கை'யால்...

உனக்கு
உதவாமலிருப்பதால்
ஊனமுற்றிருப்பது
அரசு தான்...

திருக்குவளை, வெற்றிப்பேரொளி.

* 'கவர்ஸ்டோரி' கண்டேன். அறிவியல் உலகில் இப்போதைய மகுடமாக விளங்கும் 'சோதனைக் குழாய் குழந்தை' பற்றிய செய்தியைப் படிக்காதவர் கூட எளிதில் புரிந்து கொள்ளும்படி எளிமையாக வெளியிட்டு இருந்தீர்கள். கட்டுரையின் கடைசியில் எழுப்பப்பட்டுள்ள நியாயமான சந்தேகங்கள், எங்களைச் சிந்திக்க வைத்தன!

குத்தாலம், எஸ். ராஜா.

* ஒரு நாட்டில், விஞ்ஞானம் வளர்கிறது என்று சொன்னால் மட்டும் போதாது. அதன் வளர்ச்சியைச் சாதாரண பாமரனும் உணர வேண்டும். அப்படி உணர்த்த வேண்டிய கடமை பத்திரிகைகளையே சாரும். அந்தக் கடமையை, 'டெஸ்ட் டியூப் பேபி' பற்றிய தெளிவான கட்டுரையை வெளியிட்டதன் மூலம், கல்கி நிறைவேற்றியிருக்கிறது.

ஸ்ரீரங்கம், மேகதூதன்.

* தலையங்கம் நடுநிலையாக எழுதப்பட்டுள்ளது. ஆசிரியர்களின் பிரச்னை என்ன; அரசின் தயக்கமென்ன; அரசு செய்ய வேண்டியது என்ன என எல்லோருக்கும் புரியும் வண்ணம் விளக்கியுள்ளீர்கள். 'தராசு' முள் மாறாத தலையங்கம்.

நாட்டரசன் கோட்டை, எஸ். வெங்கடாசலம்.

* சிறுகதைச் சிற்பிகளின் அறிமுகம், பெரு நண்பர்களை அறிந்து கொள்வதுபோல், மிகச் சிறப்பாகக் கல்கியால் அறிமுகம் செய்துவைக்கப்பட்டது பாராட்டத்தக்கது!

புதுக்கோட்டை, இரா. செல்வ பாண்டியன்.

* எப்படியாவது வேலை வாங்கியே தீருவது என உறுதியுடன் நின்ற புத்திசாலி இளைஞன் ஒருவனை அருமையாய்ச் சித்திரித்துள்ளது 'தகுதி' சிறுகதையில். கதையின் எதிர்பாராத முடிவுக்கும் பாராட்டுக்கள்.

கோவை, உமார்த்தி.

* 'தகுதி' கதையின் முடிவு சரியில்லை! கதாநாயகன் மூர்த்தியின் மேல் ஏற்பட்ட அனுதாபம் முடிவில் தொலைந்து விட்டது. ஒரிஜினல் டிகிரியைக் கிழித்திருந்தால் இன்றைய யதார்த்த நிலையைத் தெளிவு படுத்திய கதையாக அமைந்திருக்கும். ஜெராக்ஸ் காப்பியைத்தான் அவன் கிழித்தான் என்பதை அறிந்ததும் அவன் ஏமாற்றுப் பேர்வழி என்ற எண்ணமே மேலோங்கியதே தவிர, தந்திரசாலி என்று அல்ல.

காட்டூர், எஸ். அருள்மொழி.

* 'இந்திய அணி வெற்றி பெறுததற்குக் கபில்தேவ் மனம் வைக்காதது தான் காரணம்' என்ற பொருள் பட எழுதியிருப்பதை ஏற்க முடியாது. கபில் அடிப்படையில் ஒரு பௌலர். இருப்பினும், வந்த வேகத்தில் இருபத்து நான்கு ரன்கள் எடுத்தார். ஆனால், வெறும் மட்டையாளராகத் திகழும் வெங்சர்க்கார் தான் ஏமாற்றி விட்டார்!

மதுரை, எஸ். ஜே. இனியன்.

* பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் ஷண்முகநாதபுரத்தில் பி. எஸ். எஸ். உயர்நிலைப் பள்ளி பற்றிய செய்தி படித்தேன். (கல்கி 23.8.87) மேற்படி பள்ளியின் ஸ்தாபகரும் தலைவரும் நானே. பள்ளியின் தலைமை ஆசிரியர் கூறியிருப்பவற்றை மிகவும் கவனமாகவும் ஆர்வத்துடனும் படித்தேன். பல்வேறு காரியங்களில் நான் ஈடுபட்டிருந்த போதிலும் இந்தப் பள்ளியைச் சரிவரப் பராமரிப்பதிலும் இங்கு கல்வித்தரத்தைக் காப்பாற்றுவதிலும் நான் மிகுந்த அக்கறை கொண்டிருக்கிறேன். எனவே தலைமை ஆசிரியரிடம் உடற்பயிற்சி ஆசிரியர் ஒருவரை உடனடியாக நியமிக்க ஏற்பாடுகளைக் கவனிக்குமாறு கூறியிருக்கிறேன். இந்தக் குறையை என் கவனத்துக்குக் கொண்டு வந்த கல்கிக்கு நன்றி.

கோவை — 18, பி.எஸ்.எஸ். சோமசுந்தரம் செட்டியார்.

* கலாமந்திர் — மியூசிக் அகாடமி இணைந்து வழங்கிய நடன விழாவில், நித்யாவின் நிகழ்ச்சியை மட்டும், 'குட்டி கிருஷ்ணன்' பாராட்டி எழுதியிருக்கிறார். பாக்கி பதினாறு பேர் என்ன தவறு செய்தார்கள்?

சென்னை — 4, சாருகேசி

(அவர்கள் ஒரு தவறும் செய்யவில்லை. பதினாறு நடனங்களைப் பார்த்து விமரிசிக்க நேரமின்மை என்பது ஒன்று; மற்றொன்று: பதினாறு நிகழ்ச்சிகளையும் ஓரிரு பக்கங்களில் விமர்சிக்கப் போனால் பட்டியல் போட்டது போலிருக்குமே தவிர, படிக்க ரசமாக இராது என்பது மற்றொன்று. இவைதான் காரணமே தவிர, வேறில்லை. அந்நாளைய ருக்மிணி தேவி, பாலசரஸ்வதி முதல்; சமீப காலத்தில் பத்மா சுப்பிரமணியம், ஸ்ரீநிதி வரை அவ்வப்போது நடனக் கலைஞர்களைக் கல்கி ஊக்கப்படுத்தித்தான் வருகிறது. இனியும் ஊக்குவிக்கச் சந்தர்ப்பங்களை எதிர்நோக்கி இருக்கும்.

— ஆசிரியர்.)

# பயன் படாமல் இருக்கும் பக்கிங்காம் கால்வாய்



செங்கல்பட்டு மாவட்டத்தில் பக்கிங்காம் கால்வாய்.



துரை. பிருதிவிராஜ்.

"பக்கிங்காம் கால்வாய் சீரமைப்பு."

"பக்கிங்காம் கால்வாயில் படகுப் போக்கு வரத்து."

— ஆந்திராவிலுள்ள மசூலிப்பட்டினத்தில் ஆரம்பித்துத் தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள மரக்காணத்தில் முடியும். சுமார் நானூற்றைம்பது கி. மீ. நீளமுள்ள பக்கிங்காம் கால்வாயைப் பற்றி இப்படி அவ்வப்போது பத்திரிகைகளில் அடிபடுவதுடன் சரி. அப்புறம் அவ்வளவுதான்!

சமீபத்தில் நடந்த ஒரு கூட்டத்தில் தலைமைச் செயலாளர் பத்மநாபன் பேசும்போது, சென்னையில் ஓடும் இரண்டு ஆறு(?)களான கூவம், அடையாறு மற்றும் பக்கிங்காம் கால்வாயைச் சுத்தப்படுத்தி, அதில் எப்போதும் தண்ணீர் இருக்கும்படியான திட்டம் ஒன்றை மத்திய அரசு அங்கீகரித்துள்ளது என்றும், நூற்றைம்பது கோடி செலவில் திட்டமிடப்பட்டுள்ள இந்த வேலைக்கு, பிரிட்டிஷ் அரசின் உதவியையும் தமிழக அரசு நாடியிருக்கிறது" என்றும் கூறினார்.

"சென்னையில் ஓடும் ஆறுகளையும் பக்கிங்காம் கால்வாயின் ஒரு பகுதியையும் மட்டும் சரிப்படுத்தினால் போதுமா? பக்கிங்காம் கால்வாயின் பெரும் பகுதி செங்கல்பட்டு மாவட்டத்தில்தான் இருக்கிறது. எனவே, அந்த மாவட்டத்திலும் இந்தக் கால்வாயைச் சீரமைக்கும் வேலை நடைபெற வேண்டும்" என்று குரல் கொடுக்கிறார் செங்கை (தெற்கு) மாவட்ட ஜனதா தலைவர் துரை. பிருதிவிராஜ்.

"கிட்டத்தட்ட கடந்த 1950, 55 வரை, பக்கிங்காம் கால்வாய் செங்கல்பட்டு மாவட்டத்தின் கடற்கரையோரக் கிராமங்களுக்கு மிகவும் வசதியான நீர்வழிப் போக்குவரத்தாக இருந்தது. அப்போது, சவுக்குக் கட்டை, தென்னை மரப் பொருட்கள், கிளிஞ்சல், சுண்ணாம்பு, உப்பு, மற்றும் விவசாயப் பொருட்களைப் படகில் ஏற்றிக் கொண்டு சென்றார்கள் மக்கள். அதோடு, சென்னையிலிருந்து மகாபலிபுரம் செல்லும் மக்களும் அப்போது இக்கால்வாய் மூலம் படகில் சென்றனர். கடற்கரை ஓரமாகவே கால்வாய் செல்வதால், அதில் படகுப் பயணம் செய்வதே மக்களுக்கு இன்ப அமைதியாக இருந்தது. அதற்கான படகுத் துறைகள் பலகை வாராவதி, ஆமில்டன் பாலம், எண்ணூர், மூலகொத்தளம், கத்திவாக்கம் போன்ற இடங்களில் இருந்தன. ஆனால், நாளடைவில் பக்கிங்காம் கால்வாயில் நீர் வரத்துக் குன்றி, நகரின் சாக்கடைகளும், வடசென்னைப் பகுதியின் தொழிற்சாலைக் கழிவுகளும் கலந்ததால் கடைசியில் போக்குவரத்துக்கு உபயோகமின்றிப் போய்விட்டது.

"தற்போது ஆண்டுதோறும் மூன்று லட்சம் டன் பொருள்கள் சென்னையை நோக்கிச் செல்வதாக ஒரு புள்ளி விவரம் கூறுகிறது. பக்கிங்காம் கால்வாயைச் சீரமைத்தால் இதில் கணிசமான அளவைப் படகிலேயே எடுத்து வரலாம். பெட்ரோலியப் பொருள்களின் விலை உயர்ந்து கொண்டே போகிற நிலையில், இத்திட்டம் மிகவும் பயன்படும். மேலும், சுற்றுலாப் பயணிகளையும் படகில் கூட்டிக் கொண்டு போகலாம். அதன் மூலம் வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளையும் கவர முடியும்!" என்கிறார் துரை. பிருதிவிராஜ்.

— கௌசல்யா

செங்கை மாவட்டப் புகைப்படங்கள்:
கே. வி. ஆனந்த்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 473389.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.

## இப்போது ராயல் ஹவுஸ்ஃப்ளோரிங் செய்து பாருங்கள்!

ராயல் ஹவுஸ். இதில் உள்ள சிறப்புகள், ஒருவேளை, மற்ற ஃப்ளோரிங்கில் கிடைக்கக் கூடும். இதனை எளிதாக பரப்பலாம்— தொல்லை இல்லை. தொந்தரவு கிடையாது. சில மணி நேரங்களில் பரப்பில அழகு பாவுகிறது. சுலபமாக பராமரிக்கலாம்— கறை படியும் பயமே இல்லை.

இதன் மீது நடப்பதே சுகம்— மெத்தை போன்ற இதம். விரும்பும் டிசைன்கள்— பார்த்தால் பரவசம். மேலும் செலவும் மிச்சம். அத்துடன் அதிசயிக்கும்— ஜெர்மனி இதனை வெளிநாடுகளில் அறிமுகப்படுத்தியது. இப்போது ராயல் ஹவுஸ் இதனை இந்திய நாட்டிற்கு கொண்டு வந்துள்ளது.




**எளிதாக பாவலாம், எழிலைத் தூவலாம்**

ராயல் குஷன் வினைல் ப்ராடக்ட்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
ராம்கிருபா, 25, பரேக் ஸ்ட்ரீட், பிரார்த்தனா சமாஜ், பம்பாய்-400 004 ● 415, வொர்ல்ட் ட்ரேட் சென்டர், பாராகம்பா லேன், புது டில்லி-110 001

ULKA-RH-2A-86 TAM